# அம்புலிமாமா



மதிமுகம் : 102 ஜூலை 2000 புன்னகை : 11

## பொருளடக்கம்



## சிறப்புப் படைப்பாக



பறக்கும் குதிரை (வேதாளம் கதை)



மாதவன் மாப் பிள்ளையா னான்.



தங்க சிம்மாசனம்



இந்தியப் பண்பாடு - வரலாறு

Printed and Published by B. Viswanatha Reddi at B.N.K Press Pvt. Ltd., Chennai–600 026 on behalf of Chandamama India Limited, Chandamama Buildings, Vadapalani, Chennai–600 026. Editor: Viswam

நீங்கள்

அயல்நாடுகளில்
உள்ள உங்கள்
உறவினர், நண்பர்களுக்கு



# அம்புலிமாமா

இதழை
அவர்கள் விரும்பும்
மொழியில் கொடுங்கள்

**அஸ்ஸாமி, வங்களாம், ஆங்கிலம், ஹிந்தி, குஜராத்தி, கன்னடம், மலையாளம், மராட்டி, ஒரியா, சம்ஸ்கிருதம், தமிழ், தெலுங்கு**

அயல் நாட்டிலும் தாய்நாட்டில் உள்ள மகிழ்ச்சியை அவர்கள் அனுபவிக்கட்டும்

## சந்தா விவரம்

எல்லா நாடுகளுக்கும் விமானத்தபாலில்
பன்னிரண்டு பிரதிகளுக்கு ரூ.900.

இந்தியாவில் தரைவழித் தபாலில்
பன்னிரண்டு பிரதிகளுக்கு ரூ.120.

நீங்கள் செலுத்தும் பணத்தை டி.டியில் அல்லது மணியார்டரில் '**சந்தமாமா இந்தியா லிமிடெட்**' என்ற பெயர் எழுதி அனுப்பவும்

முகவரி :
**பதிப்பகப் பிரிவு**
**சந்த மாமா இந்தியா லிமிடெட்**
சந்தமாமா பில்டிங்ஸ்
வடபழனி, சென்னை - 600026.


ஆசிரியர்
**விஸ்வம்**



எல்லாக் கடிதப் போக்குவரத்திற்கும்
சந்தமாமா
பத்திரிக்கைப் பிரிவு
சந்தமாமா பில்டிங்ஸ்
வடபழனி,
சென்னை - 600026.
டெலி/ பேக்ஸ்
4841778/4842087
ஈமெயில் சந்தமாமா
@விஎஸ்என்எல்.காம்

**மும்பை அலுவலகம்**
2/B நாஜ் பில்டிங்ஸ்
லாமிங்டன் ரோடு
மும்பை 400004
போன்:002-3887480
பேக்ஸ்:022-3889670


அமெரிக்காவில் தனிப் பிரதி 2 டாலர்கள் வருட சந்தா:20 டாலர்கள்
பணம் அனுப்ப வேண்டிய முகவரி:

**இந்தியா அப்ராட்**
43, வெஸ்ட் 24வது தெரு
நியூயார்க், என்.ஒய்.10010
டெலிபோன் : (212)929-1727
பேக்ஸ் : (212) 627-9503



நிறுவியோர்

பி.நாகிரெட்டி சக்கரபாணி

# இந்தியாவைத்தேடி...

மேற்கத்தியநாடு ஒன்றில் பிறந்து வளர்ந்த இந்தியர் ஒருவர் தம் முன்னோர் வாழ்ந்த ஊரின் பெருமைகளைக் கேட்டு அந்த ஊரில் இருந்து பாரத நாட்டிற்குத் தொண்டு புரிவது என்ற எண்ணத்தோடு அந்த ஊருக்கு வந்தார். ஆனால் தான் எதிர்பார்த்த பண்புகள் மக்களிடையே இல்லாமல் ஜாதி மத, இன உணர்ச்சிகள் தலை தூக்கி மக்களைப் பிரிந்துப் பாழாகியுள்ளதைக் கண்டு மனமொடிந்து திரும்பி அயல் நாட்டிற்கே சென்று விட்டார்!

அவரென்னவோ அயல் நாட்டிற்குப் போய் விட்டார். ஆனால் இதே நாட்டிலுள்ள நாம் எங்கே போவது? நாம் ஜாதி, மத, இன, மாநில உணர்ச்சிகளுக்கு அடிமைகளாகி விடாமல் இந்தியர்கள் என்ற உணர்வுடன் செயல்பட வேண்டும். நம் நாட்டில் ஒரு மாநிலத்தின் சில ஊர்கள் வேறொரு மாநிலத்தில் சேர்க்கப்படும் போது அந்த மாற்றத்தை ஏற்க வேண்டும். அவை தம் மாநிலத்திலேயே தான் இருக்க வேண்டுமெனக்கூறி மொழி, ஜாதி, மத, இன உணர்ச்சிகளைத் தூண்டிவிடாமல் அந்த ஊர்கள் நம்மை விட்டுப் போகாமல் நம் இந்தியாவிலேயேதான் இருப்பவை என எண்ணி மகிழ வேண்டும். மாநிலங்களை அமைப்பது நிர்வாக வசதிக்குத்தான் என எண்ணி நாம் இந்தியா நம் நாடு, பழம்பெரும் பாரத நாடு என எண்ணிப் பெருமிதம் அடைவோமாக!



# செய்திச்சுடர்

## உங்கள் புதிய எதிரி

நீங்கள் உங்கள் தந்தையிடம் கூறி, உங்கள் மற்ற நண்பர்கள் வைத்திருப்பது போல ஒரு செல்ஃபோன் வாங்கி வைத்திருக்கிறீர்களா? இந்த செல் ஃபோனை வாங்குவது சரியல்ல என்று நீங்களும் தெரிந்து கொண்டு உங்கள் நண்பர்களுக்கும் விளக்குங்கள். இவற்றைப்பயன்படுத்துவதால் பல உடல் நலக்குறைவுகள் ஏற்படுவதாக விஞ்ஞானிகள் கூறுகிறார்கள். இதனால் மூளைக்கட்டி நோய் கூட வரக் கூடுமாம். இது பற்றிய ஆராய்ச்சிகள் நடக்கின்றன. எதற்கும் நாம் எச்சரிக்கையாக இருந்து இப்பழக்கத்தை விட்டு விடுவது நல்லது தானே.



## மோனாலிசாவைப் படைத்தவர்

இத்தாலிய ஓவியர் லியானார்டோ-டாவின்சி உலகிற்கு அளித்த மாபெரும் ஓவிய நிதிதான் 'மோனாலிசா' எனப்படுவது. இவர் மனிதன் விண்ணில் பறக்கக்கூடும் என எண்ணிய மேதை. இவர் ஆகாய விமானத்தின் வரை படத்தைக் கூட வரைந்து வைத்திருந்தார். இவரது காலத்தில் ஓவியர்கள்தம் ரத்தத்தையும் எச்சிலையும் வண்ணங்களில் கலந்து ஓவியங்களைத் தீட்டி வந்தார்கள். விஞ்ஞானிகள் தற்போது லினோனார்டாவின் ரத்தம் பற்றிய ஆய்வில் இறங்கியுள்ளார்கள். இதனால் லியோனார்டா எப்படிப்பட்ட இயல்புடையவர் எனத் தெரிந்து விடும். காவல் துறையினர் குற்றவாளிகளின் ரத்தத்தைப் பரிசோதிப்பது போல இந்த ஆய்வும் அவரது ரத்தத்தைக் கொண்டு அலரது இயல்பைக் காண முயல்கிறதாம்.



## விண்ணுலகப் பயணிகளின் உணவு

செவ்வாய் கிரகத்திற்குச் செல்லும் விண்ணுலகப் பயணிகள் சுமார் ஆயிரம் நாட்களை இப் பயணத்தின் போது கழிக்க வேண்டிவரும். இவர்கள் மாமிச உணவு ஏற்காமல் விண் இடைவெளியில் வளரும் காரட், கோதுமை, தக்காளி, சோயா போன்றவற்றைத் தான் உட்கொள்ள வேண்டியுள்ளது.



# அன்று இதே மாதத்தில் பிறந்தவர்

இந்தியப் புரட்சித்தந்தை எனக் கருதப்படும் பாலகங்காதர திலகர் 1856 ஜூலை 23ல் மகாராஷ்டிர மாநிலத்தில் ரத்னகிரியில் பிறந்தவர். சட்டம் பயின்ற இவர் வழக்கறிஞர் தொழிலைச் செய்யாமல் சமூகத் தொண்டராகவும் பத்திரிகையாளராகவும் திகழ்ந்தார். ஆங்கிலத்தில் மராட்டா என்ற பத்திரிகையையும் மராட்டியில் கேசரி என்ற பத்திரிகையையும் நடத்தி வந்தார். 1897 முதல் ஆண்டு தோறும் வீர சிவாஜிக்கு விழா நடத்தி மக்களிடையே தேசீய உணர்வை உயர்த்தி விட்டார்.


பாலகங்காதர திலகர்

புனேயிலும் அந்நகரைச் சுற்றியுள்ள பகுதிகளிலும் ப்ளேக் நோய் பரவவே, ஆங்கில அரசாங்க அதிகாரிகள் அதைத் தடுக்கும் சாக்கில் மக்களைத் துன்புறுத்தலானார்கள். இது கண்டு திலகர் ஆங்கில அரசாங்கத்தை மிகக் கடுமையாக விமரிசிக்கவே இவர் ராஜத்துரோகி எனக் குற்றம் சாட்டப்பட்டு சிறையில் அடைக்கப்பட்டார்.

சூரத்தில் 1907ல் நடந்த இந்திய தேசிய காங்கிரஸ் மகாசபையில் இவர் தன்னுடன் அரவிந்த கோஷ் போன்ற தீவிவாதிகளையும் சேர்த்துக்கொண்டு இந்தியாவிற்கு முழுசுதந்திரம் வேண்டுமென்ற தீர்மானத்தைக் கொண்டு வரவே, காங்கிரசின் மிதவாதிகள் இதனை எதிர்த்தனர். இதனால் காங்கிரஸ் பிளவு பட்டது.

திலகர் 1920 ஆகஸ்டில் இறந்தார். அதே ஆண்டு டிசம்பரில் காங்கிரஸ் மகா சபை இந்தியாவிற்கு முழு சுதந்திரம் வேண்டும் என்ற தீர்மானத்தை நாகபுரியில் நிறைவேற்றியது. திலகர் அரசியல் வாதி மட்டுமல்ல ஆழ்ந்த சிந்தனையாளர். இவர் எழுதிய கீதா ரகசியமும் ஓரியனும் இன்றும் அழியாப் புகழ் பெற்றுள்ளது.

சுயராஜ்யம் எனது பிறப்புரிமை என முழக்கமிட்டவர் திலக். அன்றைய பர்மாவின் மாண்டலே சிறையில் அடைக்கப்பட்டு பல கஷ்டங்களை அனுபவித்த விடுதலைப் போர் வீரர் திலகர்.

இந்த இதழிலிருந்து போட்டியில் செய்யப்பட்டுள்ள மாறுதலைக் கவனியுங்கள் கதையின் சரியான முடிவை எழுதுங்கள். நல்ல பரிசுகளை வெல்லுங்கள்.

# ஆக்க பூர்வமான போட்டி

ஒரு கதையின் முன் பகுதி கீழே கொடுக்கப்பட்டுள்ளது. இதனை சரியாக முடிக்க வேண்டியதுதான் உங்கள் முயற்சி. இதன் பின்பகுதியை 200 சொற்களுக்குள் எழுதி அனுப்புங்கள். மிகச் சிறந்த படைப்பிற்கு கவர்ச்சிகரமான வெகுமதி கிடைக்கும். இப் போட்டி நம் இளைஞர்களுக்கு மட்டுமே. உங்கள் பெயர், வயது, படிக்கும் வகுப்பு, பின்கோடுடன் முகவரி ஆகியவற்றை எழுத மறந்து விடாதீர்கள். பெரியவர்களை விட நன்கு எழுதும் திறன் பெற உங்களுக்கு இது ஒரு அரிய வாய்ப்பு.

**இது கதையின் முன் பகுதி :**

கங்காபுரத்து அரண்மனைப் பூங்கா மிக அழகானது. அதில் பல்வித மலர்ச் செடிகளும் பழமரங்களும் உள்ளன. தோட்டக்காரன் அவற்றைக் கவனமாக வளர்த்து வந்தான். அப்பூங்காவில் சில குரங்குகள் இருந்தன. அவை சாதாரணக் குரங்குகள் போலல்ல. மலர்களை அவை மிகவும் விரும்பின. தோட்டக்காரன் மலர்ச் செடிகளை சிரத்தையுடன் வளர்ப்பதை அவை கவனித்தன. அவை மலர்களைப் பறிப்பதில்லை. மொட்டுகளைத் தொடுவது கூட இல்லை. அதனால் தோட்டக்காரன் அவற்றுடன் நன்கு பழகி வந்தான். அவற்றிற்குச் செடிகளுக்கு நீர் பாய்ச்சவும் கற்றுக் கொடுத்தான்.

ஒரு நாள் தோட்டக்காரனுக்கு வெளியூர் போக வேண்டியதாயிற்று. அவன் போய் விட்டால் யார் செடிகளுக்குத் தண்ணீர் ஊற்றுவார்? நன்கு யோசித்து குரங்குகளைக் கூட்டி தான் வெளியூர் போவதை சமிக்ஞையால் கூறினான். நீர் பாய்ச்சும் வேலையை அவற்றிடம் ஒப்படைத்து அதற்குப் பயன்படும் பாத்திரங்களைக் காட்டி விட்டுச் சென்றான்.

மறுநாள் குரங்குகள் செடிகளுக்கு நீர் பாய்ச்சின. அவற்றின் தலைமைக் குரங்கு அவை வேலை செய்வதை மேற்பார்வையிட்டது. திடீரென அதற்கு சந்தேகம் ஏற்பட்டது. செடிகளுக்கு சரியான அளவு நீர் பாய்ச்சப் படுகின்றதா என்பதே அது.

## ஜூன் 2000 பாரத தரிசனப் போட்டியின் விடைகள்

1. தருமர் வனவாசத்தின் போது கொக்கு வடிவில் வந்த யமதர்மன் கேட்ட வினாக்களுக்கு விடை களாக
2. அ) சகுனி காந்தார நாட்டு இளவரசன்
   ஆ) கேசரி வசித்த இடம் மகாமேரு
   இ) தருமர் ராஜசூயயாகம் செய்யுமுன் சகாதேவன் மாகிஷ்மதி மன்னனை வென்றான்
   ஈ) பரதனின் தாய் கைகேயி கேகய நாட்டு மன்னனின் மகள்
   உ) வால்மீகி ஆசிரமம் தமசா நதிக்கரையில் இருந்தது.

வேதாளம் சொல்லும் கதை

# பறக்கும் குதிரை

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அங்கு தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அவன் அதைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கி நடந்து செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே! இந்த பயங்கர நள்ளிரவில் நீ இவ்வளவு சிரமப்பட்டு எதை யோ சாதிக்க முயல்வதைப் பார்த்தால் நீ உன் நிலையைச் சரியாகப் புரிந்து கொள்ளாமல் செயல்படுகிறாயோ என்ற சந்தேகம் ஏற்படுகிறது. இவ் வாறு தனது நிலை புரியாமல்



நடந்து கொண்ட கோவிந்தன் என்ற இளைஞனின் கதையைக் கூறு கிறேன் கவனமாகக்கேள்'' என்று கூறிக் கதை சொல்ல ஆரம்பித்தது.

காஞ்சனபுர மன்னன் காந்திவர் மனுக்கு ஒரு புதல்வியும் ஒரு புதல்வனும் இருந்தனர். புதல்வி புஷ்பலதா மூத்தவள். அவள் வளர்ந்து விவாகவயதை அடைந் ததும் மன்னன் அவளுக்குத் திருமணம் செய்ய எண்ணினான். அதை அவளிடம் கூறவே புஷ்ப லதாவும் ''தந்தையே! நான் திருமணம் செய்து கொள்கிறேன். ஆனால் அதற்கு ஒரு நிபந்தனை. யார் ஒரு பறக்கும் குதிரையைக் கொண்டு வந்து எனக்குக் கொடுக் கிறாரோ அவரைத்தான் நான் மணந்து கொள்வேன்'' என்றாள்.

அதைக்கேட்ட மன்னன் திகைத்து ''மகளே! பறக்கும் குதிரை என் பதைக் கதைகளில் தான் படித்திருக் கிறோமேயொழிய யாரும் அதை நேரில் கண்டதில்லை. எனவே இந்த ஆசையை விட்டு விடு'' என்றான். ஆனால் புஷ்பலதாவோ பிடிவாதமாக ''எனக்குப் பறக்கும் குதிரையைக் கொண்டு வந்து கொடுப்பவனைத்தான் நான் மணப்பேன். வேறு யாரையும் மணக்கமாட்டேன்'' என்று கூறி விட்டாள்.

தன் மகளின் பிடிவாதத்தைத் தகர்க்க முடியாதெனக் கண்ட மன்னன் பறக்கும் குதிரையைக் கொண்டு வந்து தன் மகள் முன் நிறுத்துபவருக்குத் தன் மகளை மணம் செய்து வைப்பதாக நாடெங் கும் பறைசாற்றுவித்தான். இதனை அறிந்து பல அரசகுமாரர்கள் பறக்கும் குதிரை எங்கு இருக்கிறது என்று தேடிப் பார்த்தர்கள். ஆனால் அவர்களுக்கு அது எங்கும் இருப்ப தாகத் தெரியவில்லை. எனவே அவர்கள் தம்முயற்சியைக் கை விட்டு விட்டார்கள். இப்படியே ஒரு வருடம் கழிந்தது.

அந்த நாட்டில் கோவிந்தன் என்ற இளைஞன் இருந்தான். அவன் நல்ல அழகன். ஆனால் தாய் தந்தை யற்ற அனாதை. அவன் அவ்வூர் பெருமாள் கோவில் அர்ச்சகர் நரசிம்மபட்டரிடம் வேலைக்கு அமர்ந்து பூமாலைகள் தொடுத்து கோவிலுக்குக் கொடுத்து கோவிலில் கிடைக்கும் பிரசாதமான

உண்டக்கட்டியை வாங்கி உண்டு வாழ்ந்து வரலானான். அவன் மன்னனின் அறிவிப்பைக் கேட்டதும் ''நான் பறக்கும் குதிரையைத் தேடிக் கண்டு பிடித்து கொண்டு வந்து அரசகுமாரியின் முன் நிறுத்தி அவளை ஏன் மணந்து கொள்ளக் கூடாது?'' என்று எண்ணினான். எனவே அவன் கோவில் அர்ச்சகர் நரசிம்மபட்டரிடம் விஷயத்தைக் கூறி ''பறக்கும் குதிரை எங்கே கிடைக்கும்?'' என்று கேட்டான்.

பட்டரும் ''கோவிந்தா! நீ அதிகம் படிக்கவில்லை. அதனால் அக்குதிரை பூவுலகில் இருப்பதாக நினைக்கிறாய். அது பூலோகத்தில் இல்லை. தேவலோகம், கந்தர்வ லோகம் போன்ற பிற உலகங்களில் நீ போனால் அதைக் காண முடியும்'' என்றார். அங்கு எப்படிப் போவது என்று கோவிந்தன் கேட்கவே பட்டரும்'' நீ விந்திய மலைக் காட்டிற்குப் போனால் மலை உச்சியில் சில குகைகளும் தடாகங்களும் சோலைகளும் உள்ளன. இரவு வேளைகளில் கந்தர்வ கன்னிகைகள் அங்கு வந்து போகிறார்கள். அவர்களின் உதவியால் நீ கந்தர்வ லோகம் சென்றால் அங்கு பறக்கும் குதிரையைக் காணலாம்'' என்றார்.

கோவிந்தனும் பட்டரிடம் தான் விந்தியமலைக்குப்போய் வருவதாகக் கூறிக் கிளம்பிச் சென்றான். பட்டர் கூறிய படி அவன் மலையின்



உச்சியை அடைந்த போது ஒரு சில குகைகளையும் ஒரு தடாகத்தையும் அதன் கரையில் பெரிய மரங்களையும் செடிகொடிகளையும் கண்டான். அவன் பல கொடிகளை அறுத்து பின்னி நீண்ட கயிறாக்கி ஊஞ்சல் போலக்கட்டினான். அதில் ஆங்காங்கு வண்ணமலர்களைச் சொருகி அழகுபடுத்தினான். அதன் பின் ஒரு மரத்தின் பின் உட்கார்ந்து கொண்டு கந்தர்வக் கன்னிகைகள் வருவார்களா என்று எதிர்பார்க்கலானான்.

அன்று பௌர்ணமி. அப்போது இரவு வேளை. நிலா பால் போல் காய்ந்து கொண்ருந்தது. நள்ளிரவானதும் சில கந்தர்வ கன்னிகைகள் வந்தார்கள். அவர்கள் தடாகத்



வந்து அவள் முன் நின்று ''நான் கட்டி வைத்த ஊஞ்சலில் இவ்வளவு நேரம் ஆடினீர்களே. அதற்கு பதில் உதவியாக எனக்கு ஏதாவது செய்யாமல் போவது நியாயமா?'' என்று கேட்டான். மதுமதியும் அவனை வியப்புடன் பார்த்து, ''நீ யார்? உனக்கு என்ன வேண்டுமோ கேள். அதைக் கொடுக்கிறேன்'' என்றாள். கோவிந்தனும் தன்னைப் பற்றிக் கூறி ''எனக்குப் பறக்கும் குதிரை வேண்டும். அதைக் கொண்டு போய் அரசகுமாரி புஷ்ப லதாவிடம் கொடுத்து விட்டு அவளை நான் மணக்கப் போகிறேன்'' என்றான்.

மதுமதியும் ''ஓ! பறக்கும் குதிரையா? அதை என்னால் கொடுக்க முடியாதே. உனக்கு நீ கேட்பதைக் கொடுப்பதாக வாக்களித்து விட்டேன், அதனால் உன்னை என் கந்தர்வ லோகத்திற்கு அழைத்துச் செல்கிறேன். அங்கு பல பறக்கும் குதிரைகள் உள்ளன. அவற்றில் ஒன்றைக் கொண்டு செல்வது உன் பொறுப்பு'' என்றாள். கோவிந்தன் அதற்குச் சம்மதிக்கவே மதுமதி அவனை ஒரு முத்து மாலையாக மாற்றித் தன் கழுத்தில் அணிந்து கொண்டு கந்தர்வ லோகத்திற்குச் சென்றாள்.

அங்கே போனதும் அவள் முத்து மாலையைக் கழற்றி கோவிந்தனை முன் போல மானிடனாக்கி கந்தர்வ மன்னனின் குதிரைலாயத்தைக்

தில் இறங்கிக்குளித்து விட்டு கரைக்கு வந்தார்கள். அப்போது அவர்களில் ஒருத்தி கோவிந்தன் கட்டியிருந்த அழகிய ஊஞ்சலைப் பார்த்தாள். அதில் உட்கார்ந்து அவள் ஊஞ்சலாடலானாள் சற்று நேரமானதும் மற்ற கந்தர்வக் கன்னிகைகள் ''மதுமதி!'' நேரமாகிறது வா. நம் லோகத்திற்குப் போகலாம்'' என்றார்கள். மதுமதியோ ''நீங்கள் போய்க் கொண்டிருங்கள். நான் சற்று நேரம் ஊஞ்சலாடி விட்டுப் பிறகு வருகிறேன்'' என்றாள். எனவே அக்கன்னிகைளும் சென்று விட்டார்கள்.

மதுமதி சற்று நேரம் ஊஞ்சலாடி விட்டுக் கீழே இறங்கிப் புறப்படலானாள் அப்போது கோவிந்தன் ஓடி

காட்டி ''இங்கு பல பறக்கும் குதிரைகள் உள்ளன. அவற்றில் ஒன்றை நீ உன் சாமர்த்தியத்தால் பூலோகத்திற்குக் கொண்டு செல்ல லாம்'' என்று கூறி விட்டுச் சென்றாள். கோவிந்தன் அவற்றில் ஒரு குதிரை மிக அழகாக இருப்ப தைப் பார்த்தான். உடனே அவன் அங்கிருந்த பூங்காவிலிருந்து மலர் களைப்பறித்து வந்து மாலைகள் கட்டி அக்குதிரைக்கு அணிவித்து அலங்காரம் செய்தான். அதை எப்படி பூலோகத்திற்கு ஓட்டிச் செல்வது என்று யோசிக்கலானான்.

அன்று கந்தர்வ மன்னனின் பிறந்த நாள். அன்று அம்மன்னன் தன் லாயத்திருந்து ஒரு நல்ல குதிரை யைத் தேர்ந்தெடுத்து அந்த ஆண்டு முழுவதும் அதன் மீது அமர்ந்து சவாரி செய்வது அவன் வழக்கம். அந்த வழக்கப்படியே அந்த ஆண்டும் குதிரையைத் தேர்ந்தெடு த்தான் . அது பறக்கும் குதிரை. அதற்கு அந்த கௌரவம் கிட்டிய தற்கு கந்தர்வர்கள் ஆடிப்பாடி மகிழ்ந்தார்கள்.

அன்றிரவு கோவிந்தன் மன்ன னின் லாயத்திற்குச் சென்றான். அக் குதிரையும் ''எனக்கு ஒரு ஆண்டு காலம் மன்னனின் சவாரிக் குதிரையாக இருக்க வழி செய்தாய். இதற்குக் கைமாறாக உனக்கு நான் என்ன செய்ய வேண்டும்?'' என்று கேட்டது. கோவிந்தனும் தன்னைப் பற்றி விவரமாகக் கூறித் தான்



அரசகுமாரி புஷ்பலதாவை மணக்க விரும்புவதாகக் கூறினான். அது கேட்டு அக்குதிரை பலமாகச்சிரித்து ''மானிடனே! நீ இப்படி ஆசைப் படுவது சரியல்ல. மாலை கட்டிப் பிழைக்கும் நீ அரசகுமாரியை மணக்க ஏன் ஆசைப்படுகிறாய்? கந்தர்வலோகத்துக் குதிரைகள் பூவுலகிற்குப் போகக்கூடாது. ஆயி னும் உனக்கு கைமாறு செய்வதாக நான் கூறி விட்டதால் உன் விருப்ப படி செய்கிறேன். என் மீது உட்கார்'' என்றது. கோவிந்தனும் ஆழ்ந்து யோசித்தவாறே அந்தப் பறக்கும் குதிரை மீது ஏறி அமர அது அவனை காஞ்சனபுரம் கொண்டு போய் இளவரசி புஷ்பலதா முன் நிறுத்தியது.

கோவிந்தனும் திகைத்துப் பதுமைபோல நின்ற அரசகுமாரியிடம் ''அரசகுமாரியே! இதோ பறக்கும் குதிரை. இதன் மீது அமர்ந்து ஆகாயத்தில் எவ்வளவு நேரம் வேண்டுமானாலும் பறந்து மகிழுங்கள். நான் போய் வரு கிறேன்'' எனக் கூறி வணங்கி விட்டு அவளைத் திரும்பிக் கூட பாராமல் அங்கிருந்து சென்று விட்டான்.

வேதாளம் இக்கதையைக் கூறி ''அரசகுமாரியை மணக்கக் கடும் முயற்சி செய்த கோவிந்தன் முடிவில் அவளை மணக்காமலே ஏன் போய் விட்டான்? இக்கேள்விக்குச் சரியான விடை தெரிந்திருந்தும் பதில் கூறாவிட்டால் உன் தலை வெடித்துச் சுக்கு நூறாகி விடும்'' என்றது.

விக்கிரமனும் ''கோவிந்தன் அதிகம் படிக்காதவன். பட்டர் சொன்ன பிறகே பறக்கும் குதிரை பூலோகத்தில் கிடையாது என்றும் கந்தர்வ லோகத்தில் அல்லது தேவ லோகத்திலோ இருக்கும் என்று தெரிந்து கொண்டான். கந்தர்வ லோகக் குதிரை அவன் மிகவும் ஏழை என்பதையும் அரசகுமாரி பணக்காரி என்றும் எடுத்துக் கூறிய போது தான் அவனுக்குத் தன் நிலையும் அந்தஸ்தும் என்ன என்று தெரிந்தது. அதுவரை அவன் தன் படிப்பு பற்றியோ பணம் பற்றியோ நினைத்துப் பார்த்தது கூட இல்லை. பறக்கும் குதிரை அவனது ஆசை சரியல்ல என்று கூறியது அவனது சிந்தனையைக்கிளறி விட்டது. அதன் முடிவுதான் அவன் அரசகுமாரியை மணக்காமல் செய்து விட்டது. இது அவனது சரியான முடிவே'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் முருங்க மரத்தில் மீண்டும் ஏறிக் கொண்டது.






# நோய் தொற்றியது!

ஒரு காட்டினருகே உள்ள ஊரில் கைலாசம் என்ற கைராசிக்கார வைத்தியர் இருந்தார். அவர் தம் மிடம் வரும் நோயாளிகளுக்கு சிகித்சை அளித்து விட்டு அவர்கள் கொடுக்கும் பணத்தை வாங்கி வந்தார். ஏழை எளியவர்களுக்கு இலவசமாகவே சிகித்சை அளித்து மருந்து கொடுத்து வந்தார்.

அவரது மனைவி பார்வதிக்கோ அவரது இந்தப் போக்கு சற்றும் பிடிக்கவில்லை. தன் கணவன் கை நிறையச் சம்பாதித்து நகை, பட்டுப் புடவை என்றெல்லாம் வாங்கி வாங்கிக் கொடுத்துக் கொண்டே இருக்க வேண்டுமென அவள் ஆசைப்பட்டாள். ஆனால் அது அவளுக்குப் பகல் கனவு போலத்தான் ஆயிற்று.

ஒரு நாளிரவு பதினோறு மணி. கைலாசமும் பார்வதியும் தூங்கிக் கொண்டிருக்கையில் யாரோ அவர்களது வீட்டுக் கதவைத் தட்டினார்கள். பார்வதி இதென்ன தொல்லை என்று முணு முணுத்தவாறே கதவைத்திறக்கச் சென்றாள். அவள் பின்னாலேயே கைலாசமும் சென்றார். பார்வதி கதவைத் திறந்ததும் அங்கு ஒரு ராட்சஸன் நிற்பதைக் கண்டு பயந்து அலறினாள். கைலாசம் அவளது பயத்தைப் போக்கும் போதே ராட்சஸன் வீட்டிற்குள் நுழைந்து பொத்தென விழுந்தான். அவன் ''எனக்கு கை கால் குடைச்சல். உடம்பெல்லாம் எரிச்சல் நாவறட்சி. நீங்கள் நல்ல வைத்தியர் என்று கேள்விப் பட்டு வந்தேன்'' என்றான். கைலாசமும் நிதானமாய் அவனது நாடியைப் பிடித்துப் பார்த்து விட்டு ''நீ நோய் முற்றியபின் இப்போது என்னிடம் வந்திருக்கிறாய். பரவாயில்லை. ஒரு மாதம் தினமும் வந்து நான் கொடுக்கும் மருந்தை நீ உட்

வே. கிருஷ்ணன்



கொண்டால் உனது இந்த அமர மேக வியாதி மறைந்து நீ குணமடை வாய்'' என்று கூறி சில மாத்திரை களைக் கொடுத்து விழுங்கச் சொல்லி ஒரு கஷாயமும் கொடுத் தார். அவனும் அதைப் பருகிவிட்டு மறுநாள் நள்ளிரவு வருவதாகக் கூறி எழுந்து சென்றான்.

ராட்சஸன் போனதும் பார்வதி ''அவன் தான் ராட்சஸனாயிற்றே. நிறையப் பணம் சேர்த்து வைத் திருப்பானே. வைத்தியம் பார்க்க ஐயாயிரம் ரூபாய் வேண்டும் என்று கேட்டு வாங்காமல் இப்படி அசடாக இருக்கிறீர்களே'' என்று கடித்து கொண்டாள். கைலாசமோ ''நோயாளிக்கு சிகித்சை அளிப்பது என் கடமை. அதற்கு இவ்வளவு பணம் கொடு என்று நோயாளி யிடம் வியாபாரம் செய்வது போலக் கேட்க மாட்டேன். அவனாக இஷ்டப்பட்டுக் கொடுத் தால் வாங்கிக் கொள்வேன்'' என்றார். பார்வதி முகத்தைச் சுளித்துக் கொண்டு போனாள்.

மறுநாள் ராட்சஸன் வந்த போது பார்வதி ''அண்ணா! வைத்தியம் பார்க்க தினமும் வைத்தியருக்கு நூறு ரூபாய் கொடுக்க வேண்டும். இன்று கொண்டு வரவில்லை யானாலும் நாளை முதலாவது கொண்டுவா. வெறுங்கையுடன் வராதே'' என்றாள்.

அது கேட்டு ராட்சஸன் கோபம் கொண்டு ''இதோ பார்! அண்ணன், தம்பி என்றெல்லாம் உறவு கொண் டாடி பணம் பறிக்க முயலாதே. யாரிடம் எவ்வளவு பணம் உள்ளது எனக் கண்டு நான் அதைப்பிடுங்கிக் கொள்பவன். எனவே என்னிடம் பணம் கேட்பவனை அடித்துக் கொன்று விழுங்கி விடுவேன். இதைத் தெரிந்து கொள் '' என்றான்.

இதைக் கேட்டு பார்வதி வாயடைத்துப் போனாள். இனி ராட்சஸனிடம் பேசிப் பயனில்லை என்றும் அவன் தன் உறைவிடத்தில் சேர்த்து வைத்துள்ள பணத்தைக் கண்டு பிடித்து எடுத்துக் கொண்டு வருவது எனவும் அவள் தீர்மானித்துக் கொண்டாள். இரண்டு நாட்களுக்குப் பின் அவள் தன் கணவனிடம் தான் தன் பிறந்த ஊருக்குப் போய்விட்டு இரண்டு மூன்று நாட்களில் திரும்பி வந்து விடுவதாகக் கூறி வீட்டை விட்டுக் கிளம்பினாள். ஆனால் அவள் தன் பிறந்த ஊருக்குப் போகாமல்

அவ்வூர் எல்லையில் ஓரிடத்தில் பதுங்கி மறைந்திருந்தாள்.

அன்றிரவு ராட்சஸன் வைத்தியரைக் கண்டு மருந்து சாப்பிட்டு விட்டு காட்டினுள் உள்ள தன் குகைக்குப் போனபோது பார்வதியும் அவனைப் பின் தொடர்ந்து அவன் கண்ணில் படாமல் சென்றாள். ராட்சஸனின் குகையைக் கண்டு கொண்டபின் மறுநாள் இருட்டும் வரை அங்கேயே ஓரிடத்தில் ஒளிந்திருந்தாள். ராட்சஸன் அன்றிரவு மருந்து சாப்பிட குகையை விட்டுக் கிளம்பிச் சென்றதும் அவள் அவனது குகைக்குள் சென்று பார்த்தாள். அங்கு ஒரு பையில் தங்க நகைகளும் இன்னொரு பையில் தங்க நாணயங்களும் இருப்பது கண்டு ஒரேயடியாக மகிழ்ந்து போய் அவற்றைத் தூக்க முடியாமல் தூக்கிக் கொண்டு விடியும் வேளைக்கு ஊரை அடைந்து வீட்டிற்குச் சென்றாள்.

அப்போது கைலாசம் வீட்டின் பின்புறம் கிணற்றுங்கரையில் குளித்துக் கொண்டிருந்தார். தான் வந்ததை அவர் பார்க்கவில்லை என்று கண்டு பார்வதி தான் கொண்டு வந்த பைகளை பரண் மீது ஓரிடத்தில் ஒளித்து வைத்து விட்டு பரணிலிருந்து கீழே இறங்கினாள். அப்போது அவள் மிகவும் களைத்துப் போனதால் கட்டிலில்படுத்து விட்டாள்.

குளித்து விட்டு உள்ளே வந்த கைலாசம் கட்டிலில் படுத்திருந்த தன் மனைவியைப் பார்த்து ''நீ எப்போது வந்தாய்? உன் உடம்புக்கு




என்ன?'' என்று கேட்டார். அவளும் ''கைகால் குடைச்சல். உடம்பில் எரிச்சல் . நாவறட்சி'' என்றாள். கைலாசமும் ''இது ராட்சஸனுக்கு வந்த நோய். உன்னை எப்படிப் பற்றிக் கொண்டது? சரி. அவனுக்குக் கொடுத்த மருந்தையே கொடுக்கிறேன். இரண்டு மூன்று நாட்களில் குணம் அடைந்து விடுவாய். அதுவரை சமையலை நான் பார்த்துக் கொள்கிறேன்'' என்று கூறி குளிகைகளையும் கஷாயத்தையும் கொடுத்தார்.

அன்றிரவு ராட்சஸன் வந்த போது கைலாசம் அவனைப் பரீட்சித்து பார்த்து விட்டு ''உன் நோய் அதிசயிக்கத்தக்க விதமாய் போய் விட்டது. இனி நீ மருந்து உட்கொள்ள வேண்டியதில்லை'' என்றார். ராட்சஸனும் ''நான் காட்டை விட்டுப்

போகப் போகிறேன். என் இருப்பிடத்தை யாரோ தெரிந்து கொண்டு நான் சேர்த்து வைத்திருந்த பணத்தையும் நகைகளையும் திருடிக் கொண்டு போய் விட்டார்கள். அதனால் உங்களுக்குப் பணம் கொடுக்க முடியவில்லை. இப்போது நோய் போய் விட்டது. மறுபடியும் வந்தால் என்ன செய்வது?'' என்று கேட்டான்.

கைலாசமும் ''பரவாயில்லை. மறுபடியும் நோய் வாய்ப்பட்டால் பொறுத்துக் கொண்டு என்னிடம் வா. மருந்து கொடுக்கிறேன்'' என்று கூறி அவனை அனுப்பினார். பிறகு அவர் தன் மனைவியிடம் ''பார் இந்த அதிசயத்தை! அவனது பாவப் பணம் அவனை விட்டுப் போனதும் அவனது நோயும் போய் விட்டது'' என்றார்.

அப்போது பார்வதி ''அந்த நோய் ராட்சஸனிடமிருந்து வந்து என்னைப் பற்றிக் கொண்டு விட்டது. அவனது பாவப் பணத்தை நான் தான் திருடி எடுத்து வந்து நம் வீட்டுப் பரண் மீது வைத்திருக்கிறேன். அதையெல்லாம் தலையைச் சுற்றி எங்காவது எறிந்து விடலாம்'' எனக் கூறி தான் இரண்டு நாட்களில் செய்ததை விவரமாகக் கூறினாள். கைலாசமும் அவள் கூறியதைக் கேட்டு விட்டு ''கவலைப் படாதே. நீ எடுத்து வந்த பணத்தை எல்லாம் கிராமத்து மணியகாரரிடம் கொடுத்து விடுவோம். அவர் மிகவும் நல்லவர். ஊர் நன்மைக்காக அந்தப் பணத்தை அவர் செலவு செய்வார். பாவப் பணம் உன்னை விட்டுப் போய் விடும். நீயும் உடனே குணம் அடைந்து விடுவாய்'' என்றார். பார்வதியும் அவ்வாறே செய்யச் சொல்ல கைலாசம் பரண்மீதிருந்த இரு பைகளையும் எடுத்துக் கொண்டு போய் மணியகாரரிடம் கொடுத்து அவற்றை ஊர் நலனுக்காகச் செலவு செய்ய சொன்னார்.

பாவப் பணம் வீட்டை விட்டுப் போனதும் பார்வதியும் குணமடைந்தாள். அவளைப் பற்றிய தொற்று நோய் போயே போய் விட்டது.





# தங்கசிம்மாசனம்

7

*(கௌண்டனிய நாட்டு இளவரசன் விஜயதத்தன் விவாகம் செய்து கொண்ட பின் ராஜ குருவின் கட்டளைப்படி நகரில் அவர் குறிப்பிட்ட இடத்தில் தோண்டி ஒரு தங்க சிம்மாசனத்தை எடுத்து வந்தான். அதனை சுத்தப் படுத்தி தர்பாரில் வைத்து அதில் விஜயதத்தன் அமர இளவரசுப்பட்டத்திற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டன. விஜயதத்தன் அச்சிம்மாசனத்தில் ஏறும்போது அதன் முதல் படியிலிருந்த சத்திய சக்தி ஒரு கதையைச் சொல்லி சில கேள்விகள் கேட்க, விஜயதத்தன் சரியான பதில்களைக் கூறினான். அதனால் அவனை அடுத்தபடியில் ஏற அப்பதுமை அனுமதித்தது. இரண்டாவது படியிலிருந்த தர்ம சக்தி அவனிடம் ஒரு கதை சொல்லலாயிற்று அப்போது -)*

சுவர்ண நாட்டு மன்னன் குசத்துவஜன் நல்ல மன்னனென மக்களிடையே பெயர் பெற்றவன். மக்கள் அவனது ஆட்சியைப் புகழ்ந்தனர். அவனுடைய ஒரே மகன் மலயத்துவஜன். அவன் நல்ல விதமாய்க் கல்வி பயில தலைநகரிலிருந்து சற்று தூரத்திலுள்ள கிருஷ்ண சந்திரரின் குருகுலத்திற்கு அனுப்பப்பட்டான். அங்கு அவன் எல்லா சாஸ்திரங்களையும் கற்று குருவின் அன்பிற்குப் பாத்திரமான பிரதம சீடனாகத்திகழ்ந்து வந்தான்.

அவனது குருகுல வாசம் முடிந்தது. அவன் தலைநகருக்குத் திரும்பிச் செல்ல ஏற்பாடுகளைச் செய்யலானான். அப்போது அவனுக்கு வந்த செய்தி பேரிடி போல இருந்தது. அண்டை நாட்டு மன்னன் வஜ்ஜிரகீர்த்தி சுவர்ணகிரி மீது திடீர் தாக்குதல் நடத்தி அந்தப்புரத்தில் தூங்கிக் கொண்டிருந்த மன்னன்



குசத்துவஜனையும் அவனது மனைவியையும் கொன்று விட்டானாம். சுவர்ணகிரிக் கோட்டையில் வஜ்ஜிரகீர்த்தி இருக்கிறானாம்.

இச் செய்தி கேட்டு மலயத்து வஜன் திகைத்துப் போனான். அப்போது கிருஷ்ண சந்திரர் அவனுக்கு ஆறுதல் கூறி ''மலயத்துவஜா! இந்த துக்கம் உனக்குச் சாதாரணமான தல்ல. இதனைத் தாங்கிக் கொள்ளும் இதயம் வேண்டும். தற்போதைய நிலையில் உன் எதிர் காலம் பற்றி யோசிக்க வேண்டும். இது மிக முக்கியம். உன் உயிருக்கே கூட ஆபத்து வரலாம்'' என்றார்.

மலயத்துவஜனும் ''ஆமாம். என் பெற்றோரைக் கொன்ற வஜ்ஜிரகீர்த்தி என்னை மட்டும் விட்டு வைப்பானா? அவன் என்னை ஒழிக்கு முன் நான் அவனை ஒழித்து விட வேண்டும்'' என்றான். கிருஷ்ண சந்திரரும் ''நீ சொன்னது சரியே. உன் மீது எனக்கு முழு நம்பிக்கை உள்ளது. நீ உன் முயற்சியில் வெற்றி பெறுவாயாக'' என்று வாழ்த்தி அனுப்பினார்.

மலயத்துவஜன் ஒரு சாதாரண மானவன் போல உடை அணிந்து தன் வாளுடன் குதிரை மீது அமர்ந்து எங்கும் தங்காமல் போய் மறுநாள் மாலையில் சுவர்ணகிரிக்கருகே யுள்ள சிறிய நாடான வேடுவர் நாட்டை அடைந்தான். அதன் மன்னன் சிம்மகுப்தன் குசத்துவஜனின் ஆருயிர் நண்பன். தன்னைப் பார்க்க வந்த மலயத்துவஜனை அடையாளம் கண்டு கொண்டு சிம்ம குப்தன் அவனைத்தன் அந்தரங்க அறைக்கு அழைத்துச் சென்றான். அவன்தான் இன்னானென அவனிடம் கூறவே சிம்மகுப்தனும் ''எனக்கு நீயாரென்று தெரியும். கடவுள் தான் உன்னை என்னிடம் அனுப்பி இருக்கிறார். என் வீரர்களோடு இப்போதே போய் வஜ்ஜிரகீர்த்தியைத் தோற்கடித்து அவனது நாட்டையும் உன் தந்தையின் நாட்டையும் கைப்பற்றுவோம்'' என்றான்.

மலயத்துவஜனோ ''நாம் அவசரப் படக்கூடாது'' எனவே சிம்மகுப்தனும் ''ஆம் யோசித் துச் செயல்பட வேண்டியதுதான். உனக்கு என்னென்ன வேண்டும்?'' என்று கேட்கவே மலயத்துவஜனும் ''எனக்கு உதவி புரிய சுறுசுறுப்பான இளைஞன் ஒருவன் வேண்டும். கொஞ்சம் பணம், ஒருசில நகை கள், பலவகை விஷங்கள் தடவிய சில ஊசிகளும் வேண்டும். இவை தான் எனக்கு வேண்டியவை'' என்றான். சிம்மகுப்தனும் ''இவ்வளவு தானே. இவையாவும் நாளைக் காலை தயாராக இருக்கும்'' என்றான்.

மறுநாள் காலை சிம்மகுப்தன் ஒரு வாலிபனை அழைத்துக் கொண்டு மலயத்துவஜனைக் காண வந்தான். அந்த வாலிபனைப் பார்த் ததும் மலயத்துவஜன் ஆச்சரியப் பட்டான். மறு நொடியில் அவன் ''இளவரசி சாலினிதேவியாரே! நீங்கள் எனக்கு உதவ வந்துள்ளது நான் செய்த பாக்கியம்'' என்றான்.

அதுகேட்டு ஆண் வேடத்தில் வந்த சாலினி வெட்கித் தலைகுனிந் தாள். சிம்ம குப்தனும் ''பேஷ்! பேஷ்!! இவள் என் மகளென்று எப்படித் தெரிந்து கொண்டாய்?'' என்று கேட்டான். மலயத்து வஜனும் ''போர்க் கலையில் சிறந்த



இளவரசி சாலினி தங்களோடு இருக்கையில் வேறுயாரை நீங்கள் தேர்ந்தெடுக்கப் போகிறீர்கள்? எனவே என் அனுமானம் சரி என்றாகி விட்டது'' என்றான். சிம்மகுப்தனும் ''நீ கேட்ட பொருள்களும் இதோ உள்ளன. உங்கள் இருவருக்கும் குதிரைகளும் தயாராக உள்ளன'' எனக் கூறி அவற்றை மலயத்துவஜனிடம் ஒப்படைத்தான்.

அவர்கள் அவற்றைப் பெற்று கொண்டு குதிரைகளில் அமர்ந்து அன்று பகல் முழுவதும் பயணம் செய்து மாலையாகும் போது ஒரு காட்டுப் பகுதியில் தங்கி சற்று ஓய்வு எடுத்தார்கள். அப்போது



சாலினி ''ஆண் வேடத்தில் வந்தது நான் தான் என்று எப்படிக் கண்டு கொண்டீர்கள்?'' என்று கேட்டாள். மலயத்துவஜனும் ''இதென்ன பிரம்ம வித்தையா? உன் நடை, உன் கண்கள், உன் செய்கை எல்லாம் ஒரு இளம் பெண்ணினுடையதாக இருக்கவே நீ பெண்தான் என்று கண்டு கொண்டேன்'' என்றான் இதைக் கேட்ட சாலினி நாணத்தால் முகத்தைத் திருப்பிக் கொண்டாள்.

சற்று நேரமானதும் அவர்கள் அங்கிருந்து கிளம்பிப் போய் சுவர்ணகிரியின் எல்லையை அடைந்தார்கள். அங்கு ஓரிடத்தில் தம் குதிரைகளைக் கட்டிவிட்டு நடந்தே ஊருக்குள் சென்றார்கள். மலயத்துவஜன் முக்கியமான பெரிய வீதிகளில் செல்லாமல் ஏழைகள் வசிக்கும் பகுதியை நோக்கிச் சென்றான். சாலினியும் அவனுடன் சென்றாள். ஜன நடமாட்டமே இல்லாத அப்பகுதியில் ஒரு வீட்டினுள் உள்ள யாரோ இருவர் மெதுவாகப் பேசியது அவர்களுக்குக் கேட்டது.

மலயத்துவஜன் அவ் வீட்டின் திண்ணை மீதேறி சுவரை ஒட்டி நின்று உள்ளே என்ன பேசிக் கொள்கிறார்கள் என்பதைக் கேட்கலானான். சாலினியும் அவனருகே வந்து நின்றாள். அப்போது ஒரு பெண் குரல் ''அடடா! அவர்கள் இளவரசரைத் தேடிப் பிடித்துக் கொல்லவா போகிறார்கள்?'' என்று கேட்டது. அதற்கு பதில் கூறுவது போல ஒரு ஆண் குரல் ''நாடாசை கொண்டு அலையும் வஜ்ஜிர கீர்த்தி இளவரசரை மட்டும் விட்டு வைப்பானென்று நீ நினைக்கிறாயா? அவனை ஏன் குற்றம் சொல்ல வேண்டும்? நம் நாட்டில் கந்தர்ப்பன் போன்ற கருங்காலிகள் இருக்கும் போது எதிரிகள் பாடு கொண்டாட்டம்தானே. இந்தத் துரோகிகளே நமக்கு உண்மையான எதிரிகள். இவர்களை எல்லாம் பிடித்துக் கண்டதுண்டமாக வெட்டி கழுகுகளுக்கும் காக்கைகளுக்கும்

இரையாகப் போட வேண்டும். இதுதான் இவர்களுக்கான சரியான தண்டனை'' என்றான்.

அப்போது பெண் குரல் ''என்ன சொன்னீர்கள்? நம் படைத்தளபதி கந்தர்ப்பர் துரோகியா? நம்ப முடியவில்லையே'' என்று சற்று உரக்ககூறியது. அது கேட்டு ஆண் குரல் ''உஷ் மெதுவாகப் பேசு. கத்தாதே. யாராவது கேட்டு விட்டால் நமக்குத் தான் ஆபத்து. பாதி ராத்திரியாகி விட்டது. பேசினது போதும். போய் படு'' என்றது. அதன் பின் பேச்சுக் குரல் எதுவும் கேட்கவில்லை.



சற்று நேரம் பொறுத்திருந்து விட்டு மலயத்துவஜன் அவ்வீட்டின் கதவைத் தட்டினான். அப்போது சற்று முன் பேசிய ஆண்குரல் கதவருகே நின்று சற்று பயந்த குரலில் ''யாரது?'' என்று கேட்டது. பதிலுக்கு மலயத்துவஜன் ''பயப்படாதே. நண்பன் தான்'' என்றான். ஓரிரண்டு நிமிடங்கள் கழித்தே கதவு திறக்கப்பட்டது. மலயத்துவஜனும் சாலினியும் சட்டென அவ்வீட்டிற்குள் நுழைந்தார்கள். அவர்கள் கதவை மூடி விட்டு வீட்டுக்காரனிடம் தாங்கள் இன்னாரென்பதைக் கூறினார்கள்.

தன் வீட்டிற்கு வந்திருப்பவன் இளவரசன் மலயத்துவஜன் என்று தெரிந்து கொண்டான் அந்த வீட்டின் சொந்தக் காரனான சுகேது. அவன் அடைந்த மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. மலயத்துவஜன் அவனிடம் பல கேள்விகளைக் கேட்டுத் தனக்கு வேண்டிய விவரங்களைச் சேகரித்துக் கொண்டான்.

மறுநாள் காலையில் மயலத்துவஜன் கூறியபடி வஜ்ஜிரகேதுவின் படுக்கை அறைக்குக் காவலாக உள்ள குருவண்ணனை சுகேது தன் வீட்டிற்கு அழைத்து வந்தான்.



மலயகேது அவனிடம் நிலைமையை விளக்கி அவன் செய்ய வேண்டியது என்ன என்பதனையும் எடுத்துரைத்தான். அதைக் கேட்ட குருவண்ணன் நடுங்கினான். அப்போது மலயத்துவஜன் ஒரு முத்து மாலையை எடுத்து அவனுக்குக் கொடுக்கப் போகையில் குருவண்ணன் ''வேண்டாம். இப்போது இது போன்ற விலையுயர்ந்த பொருள்கள் என்னிடம் இருந்தால் எனக்கே ஆபத்து. இறந்த மன்னரிடம் நான் விசுவாசம் கொண்டவன். எனவே நீங்கள் கூறியபடியே செய்கிறேன். நீங்கள் மட்டும் இரவில் இரண்டாவது ஜாமம் கழிந்ததும் வந்து விடுங்கள்'' என்று கூறி மலயத்துவனுக்கு விழுந்து வணக்கம் செலுத்திவிட்டுச் சென்றான்.

குருவண்ணன் சென்றபின் படைத்தளபதி கந்தர்ப்பனின் படுக்கையறைக்குக் காவல் இருக்கும் வீரண்ணனை சுகேது அழைத்து வந்தான். மலயத்துவஜன் அவனிடம் தான் யாரென்பதைக் கூறவே அவன் திடுக்கிட்டான். அவன் கண்களில் கண்ணீர் ததும்பியது. அவன் இளவரசன் கேட்ட உதவியைச் செய்வதாக உடனேயே கூறினான். அப்போது இளவரசன் ஒரு சிறு ஊசியை எடுத்து அதை என்ன செய்ய வேண்டுமெனக் கூறியவாறே வீரண்ணனின் கையில் குத்தினான். வீரண்ணன் தேள்கடிபட்டவன் போல அலறினான். மறுநிமிடம் அவனை சாலினியின் உதவியுடன் மலயத்துவஜன் கட்டிப் போட்டான்.

அதன் பிறகு மலயத்துவஜன் கூறியபடி சுகேது வீரண்ணனின் மனைவியையும் அவனது ஒரே மகனான சிறுவனையும் அழைத்து வந்தான். அவர்களோடு பேசியவாறே மலயத்துவஜன் சிறு ஊசிகளால் அவர்களது உடலைக்

குத்தினான். அவர்கள் நினைவிழந்து கீழே விழுந்தார்கள். அப்போது மலயத்துவஜன் வீரண்ணனைப் பார்த்து ''நீ என்ன நினைக்கிறாய் என்பது எனக்குத் தெரியும். அதனால்தான் உன் உடலில் தேளின் விஷத்தையும் உன் மனைவிக்கும், மகனுக்கும் மயக்க மருந்தையும் உடலில் செலுத்தினேன். இனி மேலாவது நல்லதை நினைத்து நேர் வழியில் செல்ல முயற்சி செய். அப்படிச் செய்யத் தவறினால் முதலில் உன் குடும்பத்தவரும் பிறகு நீயும் பாம்பின் கொடிய விஷம் உடலில் புக இறந்து போவீர்கள். என்ன செய்வதென்று நன்கு யோசித்து ஒரு முடிவிற்குவா'' என்றான்.

அதைக் கேட்ட வீரண்ணன் கண்ணீர் உகுத்துக் கதறி இளவரசன் கூறுகிறபடியே நடப்பதாகக் கூறினான். உடனே மலயத்துவஜன் மாற்று மருந்தை அவனது உடலில் செலுத்தி ''இன்றிரவே அதைச் செய்தாக வேண்டும். நாளைக் காலைவரை உன் மனைவியும் மகனும் இங்கேயே இருப்பார்கள். நான் சொன்னபடி நீ செய்து முடித்த பிறகே நாளைக் காலை இவர்களை நீ உயிருடன் காண முடியும். இதை நினைவில் வைத்துக் கொள்'' என்று கூறி அவனது கட்டுகளை அவிழ்த்து விட்டான்.

(தொடரும்)



ஒரு உயரிய பண்பாட்டின் சம்பவங்கள் பரம்பரைபரம்பரையாய் சத்திய சோதனை

## 6. பண்பாடு மலர்ந்த மாபெரும் ஆரண்யம்

சோமநாதருடன் நதிக்கரையில் சேகரும் சியாமளாவும் நடந்து சென்று கொண்டிருந்தார்கள். அப்போது சேகர் ''தாத்தா! நீங்கள் சொன்ன ஊர்கள், நாடுகள் பெயர்களெல்லாம் நல்ல மனிதர்களின் தற்செயல்களை நினைவில் வைத் துக் கொள்ளத்தானே அவர்களது பெயர்களோடு இணைக்கப்பட்டன?'' என்று கேட்டான். தாத்தாவும் ''அதுதான் காரணம் என்று முழுமையாகச் சொல்லி விடமுடியாது. சில சமயங்கள் நற்செயல்களைச் செய்யாத கொடியவர் களைக் கூட நினைவில் வைத்துக் கொள்ளவும் சில பெயர்கள் வைக்கப் பட்டும் உள்ளன'' என்றார்.

சியாமளாவும் ''அப்படியா? கொடிய வர்களின் பெயர்கள் கூட நாடு நகரங்களுக்கு வைக்கப்பட்டிருக்கின் றனவா?'' என்று ஆச்சரியப்பட்டவாறே கேட்டாள். சோமநாதரும் ''சில சமயங்களில் கொடிய சம்பவங்கள் நிகழ்ந்ததை நாம் மறந்து விடுவதில்லை. அதனால் கொடியவர்களின் பெயர்கள் கூட அச்சம்பவங்களைநினைவில் வைத்துக் கொள்ள அவரகளது பெயர்கள் வைக்கப்பட்டு விடு கின்றன'' என்றார்.

சேகரும் ''அப்படியா தாத்தா! அவ் வாறு பெயரிடப்பட்ட ஒரு பகுதியைப் பற்றி இன்று எங்களுக்குக்கூறுகிறீர்களா'' என்று கேட்டான். சோமநாதரும் ''ஆகா! சொல்கிறேன். இதற்கு நல்ல உதாரணம் தண்டகாரண்யம் என்றகாட்டுப் பகுதியே'' என்றார். சேகரும் ''இது ராமாயணத்தில் குறிப்பிடப்பட்டுள்ள பெயரல்லவா?'' என்று கேட்டான்.

சோமநாதரும் ''ஆமாம். ராமாய ணத்தில் வரும் பல நிகழ்ச்சிகள் இந்த



- பாரதீயன் -



## ...ாடு - வரலாறு



தண்டகாரண்யத்தில் நடந்தவை. உலகின் மிக பெரிய காடுகளில் இந்த தண்டகாரண்யமும் ஒன்று. இது மிகப் பழமையானது என்பது மட்டுமல்ல உயரிய பண்பாட்டை மலரச்செய்தது என்றும் கூறலாம். இதற்கு இணையான காட்டுப்பகுதி உலகில் வேறு எங்கும் இல்லை.'' என்றார்.

சியாமளாவும் ''தண்டகாரன்யம் புராண காலத்து ராமாயணத்தில் குறிப்பிடப்பட்ட வனப்பகுதி. ஆனால் அது இன்று எங்கே இருக்கிறது?'' என்று கேட்டாள். சோமநாதரும் ''நம் நாட்டில் காடுகள் அழிக்கப்பட்டு வருவதால் தண்டகாரண்யமும் அழிந்து விட்டிருக்குமோ என்று சந்தேகப் படுவது இயல்பு தானே. தண்டகாரண் யத்தில் நிகழ்ந்த பல நிகழ்ச்சிகளை நாம் ராமாயணத்தில் படிக்கிறோம். இங்கு தான் முனிவர்களின் யாகங்களை அழிக்க முயன்ற இராவணனின் தங்கை சூர்ப்பனகை ராமரை மணக்க விரும்பி லட்சுமணனிடம் அவமானப்பட்டு காது, மூக்கு அறுபட்டு ஓடியதும் இங்கு தான் நிகழ்ந்தது. இந்த வனத்திலிருந்து தான் சீதையைக் கவர்ந்து சென்று கொண்டிருந்த ராவணனை எதிர்த்து ஜடாயு போர் புரிந்தான். இம்மாதிரி இங்கு பல சம்பவங்கள் நடந்துள்ளன. இன்று இந்த மாபெரும் காடு மத்தியபிரதேசம் ஆந்திரா, ஒரிஸ்ஸா மாநிலங்களில் பரவிக் கிடக்கிறது'' என்றார்.

அப்போது சேகர் ''தாத்தா! இந்த மாபெரும் காட்டிற்கு தண்டகாரண்யம்



என்ற பெயர் ஏன் வந்தது?'' என்று கேட்டான். சோமநாதரும் ''இப்பகுதி ஒரு காலத்தில் தண்டகவம்சத்து மன்னர்களின் ஆட்சியின் கீழ் இருந்தது. அந்த வம்சத்து மன்னர்களில் ஒருவனான தண்டகன் இளைஞன். அவன்

எப்போதும் சுகபோகங்களில் மூழ்கி இருக்க விரும்புபவன். ஒரு நாள் அவன் குதிரை மீது அமர்ந்து செல்கையில் ஒரு தடாகத்தில் குளித்து விட்டு வந்து கொண்டிருந்த இளம் பெண் ஒருத்தியைக் கண்டான். சாதாரண பெண்களில் அவ்வளவு அழகானவள்



கிடையாது என்பதை அவன் உணரவில்லை ''என்று கூறி மேலும் தொடர்ந்தார்.

''அந்தப் பெண் மணியைப் பார்த்து புன்னகைபுரிந்தான். பின்னர் அவள் குதிரைமீதிருந்து இறங்கி ஓடி அவனை வழி மறித்து '' நீ வழி தவறி வந்து விட்டாயா? நான் உனக்கு உதவி புரிகிறேன்'' என்று கேட்டான். அவளோ ''அதெல்லாம் இல்லை. நீ உன் வேலையைப் பார்த்துக் கொண்டு போ'' எனவே தண்டகன் ''இங்குள்ள மக்களையும் காப்பது தான் என் கடமை. நான் இந்நாட்டு மன்னன் எனவே நான் உன்னை மணந்து கொண்டு உனக்கு உதவப் போகிறேன்'' என்றான்.

அந்தப் பெண்ணோ ''நீ சொல்வதை நான் நம்பமாட்டேன். மன்னனுக்கு நற்பண்புகள் இருக்க வேண்டும். ஒரு பெண்ணை ஒருவன் மணக்க இரு வழிகளே உண்டு. ஒன்று பெண் அந்த ஆடவனை மணக்க சம்மதிக்க வேண்டும். இரண்டாவது அப்பெண்ணின் பெற்றோர்கள் அந்த ஆடவனுக்கு தம் மகளை மணம் செய்து வைக்க இசைய வேண்டும். இந்த இரு வழிகளைத் தவிர முறையான திருமணம் நடக்க வேறு வழி எதுவும் இல்லை. நான் உன்னை மணக்க விரும்பவில்லை. இத் திருமணம் நடக்க என பெற்றோர் இசைவும் இல்லை. எனவே இவ்விவாகம் நடக்காது'' என்றாள்.

தண்டகன் பலமாகச்சிரித்து ''பெண்ணே! ஒரு அரசனைத்தம் மருமகனாக ஏற்காமல் எந்தப் பெற்றோர் தாம் இருக்க முடியும்? எனக்கு இந்த சம்பிரதாயம் எல்லாம் பிடிக்காது. உன்னை இப்போது என் அரண்மனைக்குக் கொண்டு போகப் போகிறேன். அங்கு உன் பெற்றோருக்குப் பணம் அனுப்பி நம் திருமணம் பற்றிய தகவல் அனுப்புகிறேன்'' என்றான்.

அவளோ '' இது நடக்காது. என் தந்தை சுக்கிரச்சாரியார் இதற்கு

இணங்கமாட்டார். நான் அவரது மகள் அரஜை'' என்றாள். தண்டகன் அவளது கைகளைப் பற்றி இழுக்கவே அவள் திமிறினாள். அவளது உடலில் பல காயங்கள் ஏற்பட்டன. அவள் அவனைத் திட்டியவாறே அவனிடமிருந்து தப்பி புதர்களிடயே மறைந்து ஓடி விட்டாள்.

தன் மகள் காயப்பட்டு ஓடி வந்தது கண்டு சுக்கிராச்சாரியார்'' என்ன நடந்தது?'' என்று விசாரித்தார். அரஜையும் தண்டகன் தன்னிடம் தகாத முறையில் நடந்ததைக் கூறினாள். தண்டகனின் அட்டூழியங்களைப் பற்றி கேட்டறிந்திருந்த சுக்கிராச்சாரியார் ஒரு யாகம் செய்து ஹோமம் குண்டத்திலிருந்து உக்கிரசக்திகளை வரவழைத்து ''நீங்கள் அந்த தண்டகனின் நாட்டை நிர்மூலமாக்குங்கள். சாதுக்கள், நல்லவர்கள், ஆகியவர்களையும் மிருகங்களையும் விட்டு விடுங்கள்'' என்றார்.

அவ்வளவு தான்! தண்டகனின் மாடமாளிகை கூடகோபுரங்கள் எல்லாம் நெருப்பில் பொசுங்கின. அந்நாட்டுப்பட்டணங்களுடன் ஊர்களும் எரிந்தன். தண்டகனின் நாடு முழுவதுமாக எரிந்து சாம்பலாகி விட்டது. சாதுக்களும் சன்னியாசிகளும் நல்லவர் களும் வேறு நாடுகளுக்குப் போய் விட்டார்கள். அந்தப் பகுதியில் மழையே இல்லை. எங்கு பார்த்தாலும் ஒரே சாம்பலாக இஅருந்தது.

பல ஆண்டுகளுக்குப் பின் காற்றால் அங்கு கொண்டுவரப்பட்ட விதைகள் பரவி விழுந்தன. மழை பெய்தது. அதனால் அவ்விதைகள் முளைத்து மரங்களாகிப்பல வருடங்களுக்குப்பின் வளர்ந்து மாபெரும் காடாகியது. சில நூற்றாண்டுகளுக்குப் பின் அப்பகுதியில் மனிதர்களும் ராட்சஸர்களும் வந்து வாழலானார்கள். இந்த மாபெரும் வனப் பகுதி கொடியவனான தண்டகனின் பெயரில் தண்டகாரண்யம் எனக் கூறப்பட்டது. அப்பெயரே அதற்கு நிலைத்து விட்டது''.

(தொடரும்)





# கழுதைக்கா கௌரவம்?

பரமனூரருகே ஆசிரமம் அமைத்து சிவானந்தர் என்ற அடிகள் வசித்து வந்தார். அவரை அவரது சீடர்கள் தம் இல்லங்களுக்கு அழைத்த போதெல்லாம் அவர் தம் ஆசிரமத்திலிருந்து நடந்தே அவர்களது வீடுகளுக்குச் சென்று உணவு உண்டு அவர்கள் கொடுக்கும் காணிக்கைகளோடு ஆசிரமத்திற்குத் திரும்பி வருவார். இம்மாதிரி பல ஆண்டுகள் நடந்தது.

சிவானந்தருக்கு வயது எழுபதிற்கு மேலாகி விடவே அவரால் முன் போல நடக்க முடியவில்லை. இதைக் கண்ட அவரது சீடர் ஒருவர் ஒரு கழுதையைக் கொண்டு வந்து கொடுத்து ''சுவாமி! உங்களால் எங்கும் நடந்து போக முடியவில்லை. என்னால் நிறையப் பணம் கொடுத்து ஒரு குதிரை வாங்கிக் கொடுக்க முடியவில்லை. என்னிடமிருந்த பணத்தில் இதைத் தான் வாங்க முடிந்தது. இதனை ஏற்று இதன் மீது அமர்ந்து நீங்கள் எங்கும் போய் வாருங்கள்'' என்று பணிவுடன் கூறினான்.

பக்தி சிரத்தையுடன் சீடன் கொடுத்த கழுதையை சிவானந்தர் ஏற்று அது முதல் அதன் மீது அமர்ந்து செல்ல வேண்டிய இடங்களுக்கெல்லாம் போகலானார். சிவானந்தர் எங்கு போனாலும் அவர் கழுதை மீதிருந்து இறங்கு முன் அவருக்கு மாலைகள் போட்டு சீடர்கள் வரவேற்றனர். அந்த மாலைகளிலிருந்து மலர்கள் உதிர்ந்து கழுதை மீது விழும் போதெல்லாம் மக்கள் தன்னையும் கௌரவிக்கிறார்களென்று அக்கழுதை நினைத்து விட்டது. மேலும் சிவானந்தரின் கழுதை என்றாலே அதற்கு நல்ல தீவனம் வைத்து சீடர்கள் அதனை

காரை குருமூர்த்தி

கவனித்துக் கொண்டார்கள். இதனால் கழுதை தன் மதிப்பு உயர்ந்து விட்டது என எண்ணியது.

சிவானத்தரை அப்பகுதி ஜமீன்தாரர் அடிக்கடி அழைத்து கௌரவித்ததால் அவர் தம் கழுதை மீது அமர்ந்தே அவரது மாளிகைக்குச் சென்று வந்தார். அதனால் அவரது கழுதைக்கு விசேஷ கவனிப்பும் நல்ல தீனியும் நிறையக் கிடைத்து வந்தது. இதனால் அக் கழுதை சிவானந்தர் ஜமீன்தாரர் வீட்டிற்கு மட்டுமே போய்க் கொண்டிருக்க வேண்டுமென விரும்பியது.

ஒருமுறை சற்றுத் தொலைவிலுள்ள கிராமத்து சீடர் ஒருவர் சிவானந்தரைத் தன் ஊருக்கு அழைத்துக் கொண்டு சென்று கொண்டிருந்தார். வழக்கம் போல சிவானந்தர் தம் கழுதை மீது அமர்ந்து செல்லவே அவர் கூட சீடரும் அவருடன் வந்தவர்களும் நடந்து சென்று கொண்டிருந்தார்கள். அவர்கள் நான்கு பாதைகள் சேரும் இடத்தை அணுகிக் கொண்டிருந்தார்கள். அதில் இடதுபுறமாக செல்லும் பாதை ஜமீன்தாரரின் ஊருக்கும் வலதுபுறப்பாதை அச்சீடரின் ஊருக்கும் கொண்டு செல்லும்.

கழுதை அந்த சந்திப்பை அடைந்ததும் இடது புறம் போக முயலவே சிவானந்தரும், அந்தச்சீடரும் அவரோடு வந்தவர்களும் அக்கழுதையை வலது புறப் பாதையில் திருப்ப முயன்றனர். ஆனால் கழுதையோ முரண்டு பிடித்து சிவானந்தரைக் கீழே தள்ளி விட்டு தன்னைத்திருப்ப முயன்றவர்களைப் பின்னங்கால்களால் உதைத்து விட்டு ஜமீன்தாரரின் வீட்டை நோக்கி ஓடியது.

ஒரு சில நிமிடங்களில் அது ஜமீன்தாரரின் மாளிகையின் முன் நின்று 'காள் காளென்று கத்தியது. ஒரு கழுதை வந்து பலமாகக் கத்தி தொந்தரவு செய்கிறது என்று கூறி ஜமீன்தாரர் அதை அடித்து விரட்டச்சொன்னார். ஜமீன் பணியாட்களும் தடிகளால் அதனை ஓட ஓட அடித்து விரட்டினார்கள். அப்போதுதான் அக்கழுதைக்கு தான் சிவானந்தரைச் சுமந்து வந்தாலே தனக்கு தீனியும் சிறப்பு கவனிப்பும் கிடைக்கும் என்றும் தனியாக வந்தால் அடியும் உதையும் கிடைக்கு மென்றும் தெரிந்தது.






# சிறுமி சிரித்தாள்!

பண்ணையார் பாலய்யா தன் வயல்களைச் சுற்றிப் பார்க்கக் கிளம்பினான். அவனுக்கு சம்பளமில்லாமல் எடுபிடி வேலைகளைச் செய்பவள் அப்பண்ணையில் வேலை செய்யும் பொன்னனின் மகள் வள்ளி. அன்று அவள் பண்ணையாருக்குப் பின்னால் சோற்று மூட்டையைச் சுமந்து கொண்டு போய்க் கொண்டிருந்தாள். ஓரிடத்தில் வயல் வரப்பில் நடந்து கொண்டிருந்த பாலய்யா கால் வழுக்கிக் கீழே விழுந்து விட்டான். அவனால் எழுந்திருக்கக் கூட முடியவில்லை.

பாலய்யாவின் உடம்போ பருமனானது. கை கொடுத்துத் தூக்கி விட வள்ளியால் முடியாது. அதனால் அவன் வள்ளியைக் கூப்பிட்டு ''யாராவது பெரியவனை கூட்டிவா. அவனால் தான் என்னைத் தூக்க முடியும்'' என்றான். வள்ளி சுற்றிலும் பார்த்தாள். அடுத்த வயலின் சொந்தக்காரன் சின்னசாமி நின்று கொண்டிருப்பதைக் கண்டு வள்ளி ஓடி அவனிடம் கீழே விழுந்து கிடக்கும் பாலய்யாவை தூக்கி விட வருமாறு வேண்டினாள்.

சின்னசாமியோ ''பாலய்யா விழுந்து விட்டானா! நல்ல அடியா! என் கூட தகராறு செய்தான். கடவுளே தண்டித்து விட்டார்'' என்று கூறி பலமாகச் சிரித்தான். அவன் உதவிக்கு வரவில்லை. அது கண்டு வள்ளி மனம் நொந்து சுற்றிலும் பார்க்க சற்று தூரத்தில் கூலி வேலை செய்யும் குப்பனைக் கண்டாள். வள்ளி அவனிடம் விஷயத்தைக் கூறவே அவனோ ''அந்த பாலய்யனுக்குக் கூலியாள் என்றாலே இளப்பம். நான் வர மாட்டேன்'' என்று கூறி விட்டான்.

அப்போது வள்ளி வயலில் வேலை செய்யப் போய்க் கொண்டிருந்த காத்தானிடமும் சுப்பனிடமும் பாலய்யாவுக்கு உதவும்படி வேண்டினாள். அதைக் கேட்ட காத்தான் ''யானைக் குட்டி போல உள்ள பாலய்யா விழுவதை நான் பார்க்காமல்

**சௌம்யா கிருஷ்ணசாமி**

போனேனே. அது ஒரு வேடிக்கையான காட்சியாக இருந்திருக்கும்'' என்றான்.

சுப்பன் காத்தானைக் கடித்து கொண்டு விட்டு வள்ளியோடு பாலய்யா விழுந்து கிடக்கும் இடத்திற்கு வந்து அவனைத் தூக்கி நிறுத்தி ''உங்களுக்கோ வயதாகி விட்டது. யாரையாவது உடன் கூட்டிக் கொண்டு வயல் சுற்றிப் பார்க்க வருவது தானே. இந்தக் காலத்தில் யாருக்கும் பிறருக்கு உதவ வேண்டுமென்ற எண்ணமே இல்லை. இந்த வள்ளி சொன்னதைக் கேட்டு இரக்கப் பட்டு வந்தேன்'' என்றான்.

பாலய்யாவின் உடல் மீதும் ஆடைகளிலும் சேறும் சகதியும் ஒட்டி இருந்தது. சுப்பன் ஓடிப் போய் ஒரு இரட்டை மாட்டு வண்டியைக் கூட்டி வந்து அதில் பாலய்யாவையும் வள்ளியையும் ஏற்றி வீட்டிற்கு அனுப்பி வைத்தான். பாலய்யாவின் மனைவி அவன் வீட்டிற்குள் நுழையும் போதே, ''இதென்ன வேஷம்?'' என்று கேட்டுச் சிரித்தாள். ''என் மீது பரிதாபப்பட்டு வள்ளிதான் உதவிக்கு ஆளை அழைத்து வந்தாள். நீயோ என்னைப் பார்த்து சிரிக்கிறாயே'' என்று சிடுசிடுத்தான்.

வள்ளி உள்ளே போய் பாலய்யாவின் மருமகளிடம் ''நான் போய் சிநேகிதி பூவாயியைப் பார்த்து விட்டு நொடியில் வந்து விடுகிறேன்'' என்றாள். அவளோ ''இப்போது பூவாயியிடம் என்ன பேச்சு? வீட்டில் நிறைய வேலை இருக்கிறது. அதை எல்லாம் செய்து விட்டுப் போ'' என்று கூறிப் பாத்திரங்கள் தேய்க்க எடுத்துப் போட்டாள். பாத்திரங்கள் தேய்த்து முடித்ததும் துணி துவைக்கும் வேலை



தரப்பட்டது. அதன்பின் பாலய்யாவின் மனைவி வள்ளியைக் கூப்பிட்டு ''மொட்டை மாடியில் வடாம் உலர்த்தி இருக்கிறேன் காக்காய் வந்து கொத்தாமல் பார்த்துக் கொள்'' என்று கூறி உட்கார வைத்து விட்டாள்.

சற்று நேரத்திற்கெல்லாம் அவளது தந்தை பொன்னன் அங்கு வந்தான். அப்போது வள்ளி ''அப்பா! நான் இப்போது போய் பூவாயியிடம் பேசி விட்டு ஒரே நிமிஷத்தில் வந்து விடுகிறேன்'' என்றாள். பொன்னனும் ''இவளுக்கு அவளிடம் பேச என்ன விஷயம் இருக்கிறது? பண்ணையார் வயலில் விழுந்தது ஒன்றுதானே. அதை எப்படி அவளிடம் சொல்கிறாள் என்று நானும் கேட்கிறேன்'' என எண்ணி அவளைப் போகச் சொன்னான். அதன் பின் அவள் பின்னாலேயே அவளுக்குத் தெரியாத விதமாய் அவன் அவளைப்

பின் தொடர்ந்து சென்றான்.

பூவாயியும் வள்ளியின் வயதுப் பெண்ணே. பாலய்யாவின் வீட்டிற்குப் பக்கத்து வீட்டில் வேலை செய்பவள். அவ்வீட்டுக் கொல்லையில் தோட்ட வேலை செய்து கொண்டிருக்கும் அவளை வள்ளி அணுகினாள். வள்ளியைக் கண்ட பூவாயி தான் வேலை செய்வதை நிறுத்தி விட்டு ''வா வள்ளி! என்ன சமாசாரம் சொல்லப் போகிறாய்?'' என்று கேட்டாள். வள்ளியும் ''முதலில் நீ சொல்ல வேண்டியது ஏதாவது இருந்தால் சொல்'' என்றாள். அவள் சொல்ல ஒன்றும் இல்லை என்றாள்.

அப்போது வள்ளி ''இன்று பண்ணையார் வயலில் விழுந்து விட்டார்'' என்றாள். ''எப்படி விழுந்தார்?'' என்று பூவாயி கேட்க வள்ளியும் ''யானைக் குட்டி போல உருண்டார்'' என்று பண்ணையார் விழுந்ததை வர்ணித்தாள் பிறகு அவள் ''எனக்கு அப்போது சிரிப்பு வந்தாலும் அதை அடக்கிக் கொண்டேன். ஏனென்றால் சிரித்தால் குற்றம் அதற்குக் கூட சுதந்திரமில்லை. பண்ணையார் விழுந்தது பற்றி அவரது மனைவியும் மற்றவர்களும் சுதந்திரமாய் தமக்குத் தோன்றியபடி கருத்துக்களை வெளியிட்டார்கள் ஆனால் அடிமையாய் வேலை செய்யும் நமக்கு சுதந்திரமும் இல்லை சிரிப்பும் இல்லை. அங்கெல்லாம் சிரிக்க முடியாது. உன் எதிரில் மனம் விட்டுச் சிரிக்க முடிகிறது'' என்றாள்.

பொன்னன் இவ்வாறு அவர்கள் பேசியதைக் கேட்டு விட்டு அங்கிருந்து சென்றான். அடிமை நிலையிலுள்ள தன் பெண்ணால் சிரிக்க முடியவில்லை. வேலைக்கு அனுப்பாமல் படிக்கப் பள்ளிக் கூடத்திற்கு அனுப்பினால் சுதந்திரமாய் அவள் தன் வயதுப் பெண்களுடன் சிரித்துப் பேசுவாள். பொன்னன் வீட்டிற்குப் போனதும் தன் மனைவியிடம் விஷயத்தை விளக்கி ''நாளை முதல் வள்ளி யார் வீட்டிற்கும் வேலை செய்யப் போக மாட்டாள். பள்ளிக் கூடத்திற்குப் போவாள்'' என்றான். வள்ளி விடுதலை பெற்றாள். சிரித்தாள்.





பிரகதீஸ்வரர் ஆலயம்

சோழமன்னர்கள் காவேரி டெல்டாப் பகுதியை ஒன்பதாவது நூற்றாண்டிலிருந்து பதிமூன்றாம் நூற்றாண்டுவரை சுமார் நானூறு ஆண்டுகாலம் ஆண்டனர். பொருளாதாரத்தில் நல்ல முன்னேற்றம் கண்டு பொன்னான ஆட்சி அவர்களது காலத்தில் இருந்ததாக வரலாற்று ஆசிரியர்கள் கூறுகிறார்கள். தஞ்சாவூரைத் தலைநகராகக் கொண்டு சோழர்கள் இசை, இலக்கியம், நடனம், ஓவியம் ஆகிய துறைகளுக்குப் பெரிதும் ஊக்கம் அளித்தனர்.

சோழ மன்னர்களில் முதலாவது ராஜராஜ சோழன் (கி.பி.985-1014) தஞ்சாவூரில் மிகப் பெரிய பிரகதீசுவரர் ஆலயத்தைக் கட்டினான். ஆறாண்டுகளில் 370 கிராமத்தவர்களின் அன்பளிப்பு கொண்டு இதைக் கட்டினார்கள். கோபுரம் மீதுள்ள

காவேரிக் கரைஓரமாய்...9

# சோழர்களின் சிறப்பு

கருத்து : ஜெயந்தி மகாலிங்கம்  ஓவியம் : கௌதம் சென்

சிலைகளின் அடிப் பாகத்தில் நன்கொடை அளித்தவர்கள் பெயர்களை பொறிக்கும் முறையைக் கொண்டு வந்தவன் ராஜ ராஜ சோழனே. பலவித நன்கொடைகள் பணம் தானியம் என்ற வகையில் கிடைத்தன.

சோழ சிற்பக்கலையின் உயர்வை இந்த ஆலயம் எடுத்துக் காட்டுகிறது. ஆலய விமானம் 64 மீ. உயரமானது. இது 80 டன் நிறையுள்ள ஒரே கருங்கல் மீது நிர்மாணிக்கப் பட்டது. இக் கல்லை உயரக் கொண்டுபோக கோவிலிலிருந்து 6 கி.மீ தூரத்திலுள்ள வயலூரிலிருந்து உறுதியான சாரம் கட்டப் பட்டதாம். கோவிலில் ஒரே கல்லில் உருவாக்கப் பட்ட நந்தியின் சிலை உள்ளது. இதன் உயரம் 3.5மீ. நீளம்


தஞ்சைக் கலையில் சிலை

6 மீ நிறை 2.5 டன். இங்குள்ள லிங்கம் 3 மீ உயரம். இரண்டடுக்கு மேடை மீது இது அமைந்திருப்பதால் இதற்கு அபிஷேகம் செய்ய அர்ச்சகர் ஏணி மீது ஏறித்தான் செய்கிறார். ஆலய மண்டபத்தில் அழகிய சிற்பங்கள் உள்ளன. ஆலயச் சுவர்களில் பரத நாட்டியச்சிலைகள் பல பாவங்களை வெளிப்படுத்துபவையாக உள்ளன. நாயன்மார்களின் சிலைகளும் வைக்கப் பட்டுள்ளன.

சோழர்களுக்குப்பின் பாண்டியர் கள் ஐம்பது ஆண்டுகள் ஆண்டார்கள். பின் சிறிது காலம் மாலிக்காபூர் ஆட்சி அதன் பின் விஜயநகர மன்னர்கள் பிரதிநிதி களாய் நாயக்க அரசர்கள் 200 ஆண்டுகள் ஆட்சி புரிந்தனர். அவர்களே தஞ்சை அரண்மனையைக் கட்டியவர்கள். இலக்கிய, இசைக்கு ஆதரவளித்த ரகுநாத நாயக்கர் (1600-34) சரஸ்வதி மகாலில் ஓலைச் சுவடிகளை வைத்துப் பாதுகாக்க முதன் முதலாக ஏற்பாடு செய்தாராம்.

விஜயநகர சாம்ராஜ்ஜிய வீழ்ச்சிக் குப்பின் இங்கு மராட்டியர் ஆட்சி வந்தது. இவர்கள் பீஜப்பூர் சுல்தானின் பிரதிநிதி களாக முதலில் சகாஜி, பிறகு வெங்கோஜீயின் ஆட்சி இவர்கள் சத்ரபதி சிவாஜியின் வம்சத்தவர். 18வது நூற்றாண்டில் ஆங்கிலேயர் ஆட்சி இங்கு வந்தது. மராட்டிய மன்னர்களில் துல்சாஜி, சரபோஜி குறிப்பிடத்தக்கவர்கள். சரபோஜி தரங்கம் பாடி டேனிஷ் மிஷன் பள்ளியில் கல்வி பயின்றவர். இலக்கிய, இசை, நடனக் கலை என்றவற்றில் புலமை பெற்றவர். பரமரசிகர். சரஸ்வதி மகாலில் பண்டிதர்களை அமர்த்தி நூல்களை ஒழுங்கு படுத்தினார். இதில் இன்று சமஸ்கிருதம், தமிழ், தெலுங்கு, மராட்டி, பெர்ஷியன், உருது, சில ஐரோப்பிய மொழிகள் ஆகியவற்றின் நூல்கள் 22,000க்கும் மேல் உள்ளன.

இவற்றில் எல்லாத்துறை நூல்களும் உள்ளன. சரபோஜி சேகரித்த அதிசயப்



தஞ்சாவூர் சகோதரர்கள் பொன்னையா, சின்னையா, சிவானந்தம், வடிவேலு

பொருள்கள் கொண்ட அருங்காட்சியகம் ஒன்றும் இங்கு உள்ளது. அரண்மனையில் எட்டடுக்கு கோபுரம், விநாயகர் கோவில், பிரகதீஸ்வரர் ஆலயத்தில் நடராஜ மண்டபம் முதலியவற்றை இம் மன்னர்கள் அமைத்தார்கள்.

சோழர்களும் மராட்டியர்களும் இசை நடனக் கலை ஆகியவற்றை நன்கு ஆதரித்தார்கள். கோவில்களில் நடனமாடும் தேவதாசி குடும்பங்களுக்கு மானியங்கள் வழங்கப்பட்டன. 400க்கும் மேலான இக் குடும்பங்கள் ஆலயங்களருகே வசிக்க வீடுகளும் பெற்றன.

அக்காலத்தில் பரத நாட்டியம் 'சதிர்' என்று பெயர் பெற்றிருந்தது.

இந்த சதிராட்டத்திற்கு 19வது நூற்றாண்டில் நான்கு விதிகள் அமைத்துச் சீராக்கினார்கள். தஞ்சை சகோதரர்களான பொன்னைய்யா, சின்னைய்யா, சிவானந்தம், வடிவேலு ஆகிய நால்வரும் சதிராட்டம் இப்படியெல்லாம் இருக்க வேண்டுமென்று முறைப் படுத்தினார்கள். இந்த நாட்டியமுறை 'தஞ்சாவூர் பாணி' என்று பெயர் பெற்றுப் புகழ்

இரண்டாவது சரபோஜி மன்னர்



அடைந்தது. இவர்கள் புகழ்பெற்ற சங்கீத மும்மூர்த்திகளில் ஒருவரான முத்து சுவாமி தீட்சிதரிடம் முறையாக இசை பயின்றவர்கள்.

சித்திரக் கலையிலும் தஞ்சாவூர் முறை என்று ஒரு தனிப்பட்ட அம்சம் உள்ளது. தடிமனான கோடுகள், சிறப்பு வண்ணங்கள் ஆங்காங்கு கண்ணாடித் தூள்கள். தங்க தகடுகள் பதித்தல் ஆகியன இக்கலையின் சிறப்பாகும். தஞ்சாவூர் வீணை, தஞ்சை மிருதங்கம் என இசைக் கருவிகளும் இன்றும் தனிச்சிறப்பு பெற்றுள்ளன.

கர்நாடக இசையின் மும்மூர்த்திகளான தியாகராஜர், முத்து சுவாமி தீட்சிதர், சியாமா சாஸ்திரியார் பிறந்த இடம் தஞ்சை மாவட்டத்திலுள்ள திருவாரூர் தான். மூவரும் சமகாலத்தவர்.



கர்நாடக இசை மும்மூர்த்திகளில் ஒருவரான தியாகராஜர்

தியாகராஜர் இங்கிருந்து பஞ்சநதிக்ஷேத்திரமான திருவையாறு வந்து வசிக்கலானார். இவர் ராம பக்தர். இவர் தம் தாய் மொழியான தெலுங்கிலும், சமஸ்கிருதத்திலும் எண்ணற்ற கீர்த்தனைகள் இயற்றிப் பாடியும் வந்தவர். இவரது அண்ணனுக்கு இவரது போக்கு பிடிக்க வில்லை. அதனால் இவர் வழிபட்ட ராமர் விக்கிரகத்தைத் தூக்கிக் காவேரி நதியில் விட்டெறிந்தார். தியாகராஜர் அதனால் வருந்தி ராமரை வரும்படி பாடவே அந்த விக்ரகம் அவரிடம் வந்து சேர்ந்ததாம்.

திருவையாற்றில் காவேரிக் கரையில் தியாகராஜரின் சமாதி உள்ளது. 1920ல் புகழ் பெற்ற பாடகி பெங்களூர் நாகரத்தினம்மா இந்த சமாதியை நேராக்கி ஆண்டுதோற்றும் தை மாதம் அவருக்கு ஆராதனை நடத்த ஏற்பாடு செய்தார். அதில் எல்லா இசைக் கலைஞர்களும் இன்றும் கலந்து கொண்டு வருகிறார்கள். ஆண்டு தோறும் ஆராதனை நடந்து, தியாகராஜரின் 'பஞ்சரத்தினக் கீர்த்தனைகள்' இச்சமாதி முன் பாடப்படுகின்றன. காவேரி நீரோட்டத்துடன் இந்த பக்திரச இசை வெள்ளம் மக்கள் மனதைக் கொள்ளை கொண்டு விடுகிறது.



# மாதவன் மாப்பிள்ளையானான்!

மாயனூரில் மாதவன் இருபத்தைந்து வயதிலேயே வியாபாரத்தில் புலி என்று பெயர் பெற்று விட்டான். அது கண்டு அவனது பெற்றோர் ''மாதவா! வியாபாரத்தில் உன் கால் நிலைத்து விட்டது. இனி உன் கல்யாணம் பற்றிப் பேசலாமா என்று உன் அத்தான் அருணாசலம் எழுதி இருக்கிறான். என்ன சொல்கிறாய்? என்று கேட்டார்கள்.

மாதவனின் தமக்கை உமையாள் அவனைவிடப் பதினைந்து வயது மூத்தவள். அவளுடைய பதினாறாவது வயதில் அவளுக்கும் அருணாசலத்திற்கும் திருமணமாயிற்று. அடுத்த ஆண்டில் அவர்களுக்குப் பிறந்த பெண் குழந்தைதான் சரசு. அவள் பிறந்ததுமே அவள்தான் மாதவனின் மனைவி என்று எல்லோரும் பேசி மகிழ்ந்தார்கள். மாதவன் அதுபற்றி அதிகம் கவலைப் படவில்லை. அவன் அத்தான் அருணாசலத்தின் மீது மிகுந்த மதிப்பு வைத்திருந்தான். அவனுடன் தாராளமாகப் பேசிப் பழகினான்.

அருணாசலம் மாயனூரிலிருந்து சற்று தூரத்திலுள்ள மருதூரில் வாழ்ந்து வந்தான். கப்பல் போன்றது அவனது வீடு. ஏராளமான நஞ்சை வயல்கள் அவனுக்குச் சொந்தம். நல்லவனெனப் பாராட்டப் படுபவன். சரசுக்குப் பிறகு அவனுக்கு இரண்டு ஆண் குழந்தைகள் பிறந்தன. மாதவனின் பெற்றோர்கள் அருணாசலத்தின் கடிதம் பற்றிக் கூறிய போது அவன் ''உங்கள் விருப்பப்படியே செய்யுங்கள்'' என்று கூறிவிட்டான்.

சிவனார் செல்வன்




அதன் பிறகு மாதவனின் பெற்றோர்கள் மருதூருக்குப் போய் இரண்டொரு நாட்கள் இருந்து விட்டு வந்தார்கள். போகு முன் தம்மோடு வரும்படி மாதவனையும் அழைத்தார்கள். அவனோ தனக்கு வேலை இருக்கிறது எனக் கூறி மறுத்து விட்டான். சரசு தன் தாத்தா வுடனும் பாட்டியுடனும் நன்கு பழகினாள். ஆனால் அவர்கள் தம் மகன் மாதவனின் திறமை பற்றி அவளிடம் கூறியபோது அவள் எதுவும் பேசாமல் மௌனமாகவே கேட்டுக் கொண்டாள்.

உமையாள் தன் மகளிடம் திருமணம் பற்றிக் கூறிய போது தனக்கு ஏன் மாதவனைப் பிடிக்க வில்லை என்று காரணங்களையும் விளக்கினாள். அப்போது உமை யாள் ''என் தம்பியைப் பற்றி உன்னை விட நான் நன்கு அறிவேன். அவனை நீ மணந்து கொண்டால் வாழ்நாள் முழுவதும் சுகமாக இருப்பாய்'' என்று எடுத்து ரைத்தாள். ஆனால் சரசு மட்டும் இஷ்ட படாதது போல தலையை ஆட்டினாள்.

உமையாள் சரசுவின் மன நிலையைத் தன் கணவன் அருணாசலத்திடம் கூறினாள். அருணாசலமும் சிரித்தவாறே ''கவலைப்படாதே. இது ஒன்றும் பெரிய பிரச்சினை இல்லை. அது

ஐந்து வருடங்களுக்கு முன் அருணாசலம் தன் குடும்பத்தோடு மாமனார் வீட்டிற்கு வந்திருந்தான். அப்போது தோட்டம் துறவுகளைக் காட்ட மாதவன் தன்னை அழைத்துப் போவான் என்று சரசு எதிர்பார்த்தாள். அவனோ அவளைப் பார்க்கக் கூட வில்லை. அவளாக இரண்டொருமுறை அது பற்றி அவனிடம் கேட்ட போதும் மாதவன் ''சும்மா நச்சரிக்காதே'' என்று கூறிவிட்டுப் போய் விட்டான். தன்னை அவன் லட்சியம் செய்யவில்லை என்ற எண்ணம் சரசுவின் மனதில் பதிந்து விட்டது. அது கோபமாகி அவள் மனதில் புகைந்து கொண்டே இருந்தது.

மாதவன் பால் அவள் கொண்ட தப்பபிப்பிராயம். இருவரும் சந்தித்துப் பேசிக் கொண்டால் எல்லாம் சரியாகி விடும்'' என்றான்.

அதன்பின் அருணாசலம் தன் மாமனாருக்கு ''திருமணத்திற்கு முன் பெண் பார்ப்பது என்பது நம் சம்பிரதாயம். ஆனால் இதை ஒரு சுப நிகழ்ச்சியாக நடத்தாமல் மாதவன் சரசுவை இப்போது பார்த்துப் பேசும்படிச் செய்ய வேண்டும். ஏதோ ஒரு வேலையைச் சொல்லி அவனை என் ஊருக்கு அனுப்புங்கள். அவனுடன் நீங்கள் யாரும் வரவேண்டாம்.'' எனக் கடிதம் எழுதினான்.



கடிதத்தைப் படித்த மாதவனின் தந்தை அவனை அழைத்து ''மருதூர் கைத்தறிச் சேலைகளுக்கு இப்போது நல்ல கிராக்கி இருக்கிறது. நீ போய் அதுபற்றி விவரங்களை முழுமையாகத் தெரிந்து கொண்டு வா. இது விஷயத்தில் அருணாசலம் உனக்கு உதவுவான்'' என்று கூறி அவனை மருதூருக்கு அனுப்பினான்.

மாதவன் மருதூரில் தன் அத்தான் வீட்டை அடையும் போது விடியற் காலை வேளை. அந்த வீட்டு வாசலில் சரசு கோலம் போட்டுக் கொண்டிருந்தாள். வீட்டு வாசலில் குதிரை வண்டி நிற்க, அதிலிருந்து மாதவன் இறங்கியதும் அவனைப் பார்த்த சரசு வெட்கப்பட்டவாறே உள்ளே ஓடி விட்டாள். அப்போது உமையாள் வாசலுக்கு வந்து திகைத்து நின்ற தன் தம்பி மாதவனைக் கண்டு ''வா! வா! ஏன் அப்படியே நின்று விட்டாய்? அவள் வேறு யாருமில்லை, நம் சரசுதான். நன்றாக வளர்ந்து விட்டாள்'' என்றாள்.

உள்ளே சென்ற சரசு அருணாசலத்தை எழுப்பி ''அப்பா! மாமா வந்திருக்கிறார்'' எனவே அவனும் ''யார்? மாதவனா? ஏது! அத்தி பூத்தது போல வந்திருக்கிறான். என்ன விஷயம் என்று கேட்கலாம்'' என்று கூறிக் கொண்டே எழுந்து வந்தான். அவன் மாதவனைப் பார்த்து ''வா வா. முதலில் முகம்



கழுவி பல் துலக்கி காப்பி சாப்பிடு. பிறகு பேசலாம்'' என்றான்.

மாதவன் குளித்து விட்டு வந்து அருணாசலத்திடம் ''இவ்வூர் கைத்தறி சேலைகள் பற்றிய விவரம் அறிய வந்திருக்கிறேன்'' என்றான். அருணாசலம் ஏதோ சொல்லப் போகையில் நல்லசாமியின் ஆள் வந்து ''ஐயா உங்களைக் கையோடு அழைத்து வரச் சொன்னார்'' என்றான். அருணாசலமும் ''சரி நீ போ. நான் பின்னாலேயே வருகிறேன்'' என்று கூறி அனுப்பி விட்டு மாதவனிடம் ''ஊர் பிரமுகன் என்றால் இதுதான் தொல்லை. ஏதாவது திறப்பு விழா என்று கூப்பிட்டுக் கொண்டே இருப்பார்கள். சரசுவும் என் போல எல்லோருக்கும் உதவுபவள். எல்லோரையும் நன்கு அறிவாள். அதனால் உன்னை சரசு எல்லாத் தறிக்காரர்களிடமும் அழைத்துச் செல்வாள்'' என்று கூறினான். பிறகு சரசுவிடமும் ''நீ உன் மாமனை நெசவாளர்களின் வீடுகளுக்கு அழைத்துக் கொண்டு போ'' எனக் கூறி விட்டு வெளியே சென்றான்.

சரசு மாதவனிடம் நூல் சேலை களைப் பற்றி விளக்கினாள். அவனோ அவளைப் பார்த்தவாறே ''நீ உடுத்தி இருக்கிற சேலை அழகாக இருக்கிறது. நீயும் மிகவும் அழகாக இருக்கிறாய்'' என்றான். அது கேட்டு அவள் வெட்கி புன்னகை புரிந்து தலை குனிந்து கொண்டாள். அன்று மாதவனை ஓரிரு கைத்தறியாளர் வீட்டிற்கும் அழைத்துச் சென்றாள்.

அன்றிரவு படுத்தபோது மாதவனுக்கு சரசுவின் நினைவே இருந்தது. ''சரசுதான் எவ்வளவு அழகாக வளர்ந்து விட்டாள்! எவ்வளவு விஷயங்களைத் தெரிந்து வைத்திருக்கிறாள்! அவளது தகப்ப னாரைப் போலவே எல்லோருக்கும் உதவுகிறாள்! எல்லோரிடமிருந்தும் பாராட்டுதல்களையும் பெறு கிறாள்! நான் ஐந்து வருடங்களுக்கு முன் பார்த்த சரசு அல்ல இவள். இவளைப் பற்றி முன் நான்

எண்ணியது சரியல்ல'' என்று நினைத்துக் கொண்டான்.

அதே இரவில் சரசுவும் ''ஐந்து வருடத்திற்கு முன் நான் பார்த்த இந்த மாமா எவ்வளவு மாறி விட்டார்! அப்போது 'வியாபாரம்' 'வியாபாரம்' என்று ஒரே கவனமாக இருந்தார். அதனால்தான் அன்று என்னை அலட்சியப்படுத்தினார். இன்றோ மிக நன்றாக என்னுடன் பேசுகிறாரே. எனவே இவரைப் பற்றி இதற்கு முன் நான் எண்ணியது முற்றிலும் தவறே'' என நினைத்தாள்.

மறுநாள் காலை சரசு மாதவனுக்கு காப்பி கொண்டு வந்து கொடுத்துக் கொண்டிருந்தாள். அப்போது வேலுசாமி என்பவன் வந்து அருணாசலத்தைப் படுக்கை அறைக்குப் போய்ப் பார்த்து ''ஐயா! இன்று என் நிலத்தில் கிணறு வெட்டப் போகிறேன் அதற்கான கங்கைப் பூஜை உங்கள் கையால் தான் நடக்க வேண்டும்'' என்றான். அருணாசலமும் ''சரி நீ போ இன்னும் ஐந்தே நிமிஷத்தில் உன் தோட்டத்திற்கு வருகிறேன்'' என்று கூறி அவனை அனுப்பினான்.

அதன்பின் அவன் மாதவனிடம் ''மாதவா! இன்றும் உனக்கு உதவ முடியாது. சரசுவே உனக்கு உதவுவாள்'' என்று கூறிவிட்டு வெளியே சென்றான். அதற்குப்



பிறகு மாதவனை அழைத்துக் கொண்டு கிளம்பிய சரசு ''இன்று நாம் தறிகாரர்களை காணப் போவதில்லை. எங்கும் தறியும் நெசவும் ஒரே மாதிரித்தான். அதனால் உங்களை இன்று இங்கிருந்து மூன்று மைல் தொலைவிலுள்ள ஒரு கோவிலுக்கு அழைத்துக் கொண்டு போகிறேன் அங்குள்ள அழகிய சிற்பங்களைக் காணலாம். உச்சி கால பூஜைவரை அங்கே இருந்து விட்டு பூஜைக்குப் பின் கிடைக்கும் பிரசாதத்தை வாங்கி சாப்பிட்டு விட்டு வருவோம்'' என்றாள். மாதவனும் ''அப்படியே செய்யலாம்'' என்று கூறவே இருவரும் அந்தக்

கோவிலுக்குச் சென்றார்கள்.

கோவில் மண்டபத்திலுள்ள சிலைகளை சரசு மாதவனுக்குக் காட்டி அவற்றைப் பற்றிக் கூற மாதவனும் கேள்வி மேல் கேள்வி கேட்டு அவளிடமிருந்து அக் கோவில் பற்றி பல விஷயங்களைத் தெரிந்து கொண்டான். உச்சி வேளைப் பூஜைக்குப் பின் அவர்கள் பிரசாதத்தை வாங்கி சாப்பிட்டு விட்டு வீட்டிற்கு வந்தார்கள்.

மகிழ்ச்சியுடன் இருவரும் வந்ததைப் பார்த்த உமையாள் தன் மகளை தனியாக அழைத்துப் போய் ''உனக்கு என் தம்பியைப் பிடித்திருக்கிறதுதானே?'' என்று கேட்டாள். சரசுவும் ''ஓ! பிடித்திருக்கிறது. மாமா முந்தைய மாமா இல்லை'' என்று சிரித்துக் கொண்டே வெட்கப்பட்டவாறே சொன்னாள். அன்று மாலை அருணாசலத்திடம் தனிமையில் பேசிய மாதவன் ''அத்தான்! எனக்கு சரசுவை மிகவும் பிடித்துப் போயிற்று. அவளுக்குத் தான் எவ்வளவு விஷயங்கள் தெரிந்திருக்கிறது. உங்கள் மாதிரியே இருக்கிறாள்'' என்றான்.

அருணாசலமும் ''உனக்கு பிடித்துப் போயிற்றல்லவா. இனி நீ தான் என் மாப்பிள்ளை'' என்று அவன் முதுகில் தட்டினான். அன்றிரவு உமையாள் அருணாசலத்திடம் சரசு மாதவனை மணக்க சம்மதித்து விட்டாள் என்று கூறவே அருணாசலமும் ''இப்படி நடக்கும் என்று எனக்குத் தெரியும். அன்று நான் சொன்னது நினைவில் இருக்கிறதா? சரசுவும் மாதவனும் சந்தித்துப் பேசினால் பிரச்சினை தீர்ந்து விடும் என்றேன். அது தீர்ந்து விட்டது பார்த்தாயா?'' என்றான்.

விரைவிலேயே சரசுவின் திருமணம் மாதவனோடு நடக்க மாதவன் அருணாசலத்தின் மாப்பிள்ளையாக ஆனான்.



## 53. போருக்கு முன்

# மகாபாரதம்

மறுநாள் போர் ஆரம்பமாகும் என்ற நிலையில் அன்றிரவு துரியோதனன் தன் படைதளபதிகளில் முக்கியமானவர்களை அழைத்து ''நீங்கள் பாண்டவர்களின் படைகளை அழிக்க எவ்வளவு நாட்கள் பிடிக்கும்? என்று கேட்டான். பீஷ்மரும் துரோணரும் முப்பது நாட்களில் அழித்து விட முடியும் என்றனர். கிருபர் தனக்கு அறுபது நாட்கள் பிடிக்கும் என்றார். அசுவத்தாமா பத்து நாட்களில் அவற்றைத்தன்னால் அழித்து விட முடியும் என்றான்.

ஆனால் கர்ணனோ தன்னால் ஐந்தே நாட்களில் அவற்றை அழித்து விட முடியும் என்று கூறவே அது கேட்டு பீஷ்மர் சிரித்து ''கிருஷ்ணரின் துணையுடன் அர்ஜுனன் உன்னை எதிர்க்காமல் இருக்கும் வரை நீ இப்படித்தான் தற்பெருமை அடித்துக் கொள்வாய்'' என்றார். கர்ணன் வாயடைத்துப் போனான். இந்த விஷயம் ஒற்றர்கள் வாயிலாக தருமருக்குத் தெரிந்தது. அதனை அவர் அர்ஜுனனிடம் கூறி ''உன்னால் கௌரவர்களின் படைகளை எத்தனை நாளில் அழிக்க முடியும்?'' என்று கேட்டார்.

அர்ஜுனனும் ''நீங்கள் ஏன் கவலைப்படுகிறீர்கள்? நம்படையால் எதிரிகளை அழித்து விட முடியும். மூவுலக வீரர்களும் ஒன்று திரண்டு வந்தாலும் அவர்களை எதிர்த்து ஒழித்து விட என்னால் முடியும். ஏனெனில் என்னிடம் பாசுபத அஸ்திரம் உள்ளது. ஆனால் அதைக் கொண்டு எல்லோரையும் கொன்று விடக் கூடாது'' என்றான். மறுநாள் காலை கௌரவப்படைகள்





நடப்பதை உடனுக்குடனே பார்க்க முடியும்'' என்றார்.

திருதராஷ்டிரனும் ''உறவினர்கள் இறப்பதைக் கண்ணால் பார்த்துக் கொண்டிருப்பதா? வேண்டாம். போர்க்களத்தில் என்ன நடக்கிறது என்று கேட்டுக் கொள்ள மட்டும் விரும்புகிறேன். அதற்கு ஏதாவது வழி இருந்தால் சொல்லுங்கள்'' என்றான். அப்போது வியாசர் ''சரி இந்த சஞ்சயனால் இரவும் பகலும் போர்க்களத்தில் நடப்பதை எல்லாம் பார்க்க முடியும். அவன் உனக்குப் போர்க்களத்தில் நடப்பதை விவரித்துக் கூறுவான்'' என்று கூறி விட்டுச் சென்றார்.

சஞ்சயனும் திருதராஷ்டிரனுக்கு குருக்ஷேத்திரத்தில் நடக்கும் போரைப் பற்றி வர்ணிக்கலானான். போர் தொடங்கு முன் கௌரவப் படைகளின் தலைமைத் தளபதியான பீஷ்மர் தன் பக்கத்து மன்னர்களிடம் ''மன்னர்களே! உங்களுக்கு வீர சொர்க்கத்தின் வாயில் திறந்துள்ளது. அச்சமில்லாது போரிடுவது க்ஷத்திரியர்களின் கடமை. க்ஷத்திரியனின் மரணம் போர்க்களத்தில்தான், வேறெங்கும் இல்லை'' என்றார். போர்க்களத்தில் கர்ணன் ஒருவனைத்தவிர மற்ற மன்னர்கள் யாவரும் இருந்தனர்.

இருதரப்புப் படைகளும் வியூகங்களை அமைத்தன. பாண்டவர்களின் படைகளின் முன்னால் பீமன் நின்று கொண்டிருந்தான். சிகண்டி வியூகத்தின் நடுவே நின்றான். வலது புறம்

போர்க்களத்திற்கு வந்து முகாமிட்டு அதனை ஒரு பெரிய நகரம் போலச் செய்தன. இது போலவே பாண்டவரின் படைகளும் எதிர் முகாமிட்டன.

உலகிலுள்ள வீரர்களெல்லாம் குருக்ஷேத்திர மைதானத்திற்கு வந்து விட்டதால் வீடுகளில் வயதானவர்களும், சிறுவர்களும் பெண்களும் மட்டுமே இருந்தனர். போர் ஆரம்பமாவதற்குச் சற்று முன் வியாச முனிவர் திருதராஷ்டிரனைக் கண்டு ''உன் மைந்தர்களுக்கும் அவர்களை ஆதரிப்பவர்களுக்கும் முடிவுகாலம் நெருங்கிவிட்டது. அதற்காக வீணாக வருத்தப்படாதே. நீ போரைக் காண விரும்பினால் உனக்கு திவ்வியதிருஷ்டியை அளிக்கிறேன். அதைக் கொண்டு நீ போர்க்களத்தில்

சாத்தியகியும் நின்று கொண்டான். திருஷ்டத்துயும்னன் படை முழு வதையும் நடத்திச் செல்லத் தயாரானான். அர்ஜுனன் தன் தேரோட்டியாக இருக்கும் கிருஷ்ணரிடம் தேரை இரு படைகளுக்கும் நடுவே நிறுத்தும் படிக் கூறினான். கிருஷ்ணரும் தேரை அவ்வாறே நிறுத்தி ''அர்ஜுனா, பீஷ்மர், துரோணர், கிருபர், அசுவத்தாமன், ஆகிய யாவரும் போர்க்களத்தில் இருப்பதைப் பார்'' என்றார்.



அர்ஜுனனும் அங்கு தன் பாட்டனார், பெரியப்பா, சித்தப்பா, ஆசிரியர், மாமன்மார்கள், சகோதரர் கள், பேரன்கள் என்று எல்லாவகை உறவினர்களும் இருப்பதைக் கண்டு இவர்களையா நான் கொல்ல வேண்டும் என்று எண்ணித் திகைத்து நின்றான்.

அவனது கையிலிருந்த வில் காண்டீபம் தானாக நழுவியது. அவன் ''கிருஷ்ணா! இந்த உறவினர் களை எல்லாம் கொன்றா நான் நாட்டைத் திரும்பப் பெற வேண்டும்? இப்படியான நிலையில் நாடும் வேண்டாம். எவ்வித சுகமும் வேண்டாம்'' என்று கூறிச் சிலை போலானான்.

அதைக் கண்ட கிருஷ்ணர் ''அர்ஜுனா! உனக்கு திடீரென இப்படி ஒரு விரக்தி ஏன் ஏற்பட்டது? இதனால் நீ சொர்க்கலோகத்தை அடைய மாட்டாய். உன் பெயர்தான் கெடும். வீரன் இவ்வாறு நிலை குலைந்து நிற்கக் கூடாது அறிவாளி கள் வாழ்விற்கும் மரணத்திற்கும் அஞ்சுவதில்லை. ஆத்மா ஒரு உடலில் நிலையாக இருப்பதில் லை. அது பல தேகங்களில் புகுந்து கொண்டே இருக்கும். ஆத்மாவிற்கு அழிவே கிடையாது. பழைய கந்த லான ஆடைகளை எறிந்து விட்டு புத்தாடைகளை அணிவதுபோல ஆத்மா நசிந்துப் போன உடலை விட்டுவிட்டு புதிய உடலுள் புகுந்து கொள்கிறது. எனவே மரணம் கெடு தலை விளைவிக்கிறது என வருந் தாமல் போர் புரிய வேண்டும். க்ஷத்திரியனின் தலையாய கடமை போர்க்களத்தில் போர்புரிவதே. போர் சொர்க்கத்திற்குச் செல்வதைத் தடுக்காது. புகழ் பெறுவதை நிறுத்தி விடாது. கெட்ட பெயரைப் பெறுவதைவிட மரணம் அடைவதே



மேல். போரில் வெற்றி பெற்றால் சுகபோகங்களை அடைவாய். அதில் இறந்தால் சொர்க்க லோக போகத்தை அடைவாய். சுகத்தையும் துக்கத்தையும், லாபத்தையும் நஷ்டத்தையும், வெற்றியையும் தோல்வியையும் சமமாகக் கருதுபவனே சஞ்சலமற்ற நிலையான மனம் கொண்ட அறிவாளி'' எனப் பலவாறு உபதேசம் செய்தார்.

கிருஷ்ணரின் இந்த கீதோபதேசத்தால் அர்ஜுனனின் மனம் மாறியது. அவனது சந்தேகங்கள் மறைந்தன. இச்சமயம் தருமர் தம் கவசங்களைக் கழற்றி வைத்து விட்டு தேரிலிருந்து இறங்கி நடந்து கைகளைக் கூப்பியவாறே பீஷ்மரை நோக்கிச் சென்றார். அது கண்டு அர்ஜுனனும், மற்ற பாண்டவர்களும் தம் தேரிலிருந்து இறங்கி தருமரின் பின்னால் சென்றனர். எல்லோருக்கும் பின்னால் கிருஷ்ணரும் சென்றார்.

அப்போது அர்ஜுனன் தருமரிடம் ''அண்ணா! தாங்கள் எதிரிகளின் படைகளுள்ள இடம் நோக்கி நடந்து செல்வதன் நோக்கம்யாதோ?'' என்று கேட்டான். தருமரோ பதில் எதுவும் கூறாமல் நடந்து கொண்டே இருந்தார். கிருஷ்ணர் சிரித்துக் கொண்டே ''அவன் பீஷ்மரிடமும் துரோணரிடமும், கிருபரிடமும், சல்லயனிடமும் அனுமதி பெற்றுக் கொண்டு பிறகு போரை ஆரம்பிக்கப் போகிறான். இவ்வாறு பெரியவர்களிடம் அனுமதி பெற்றுப் போர் புரிந்தால் வெற்றி நிச்சயம் கிட்டும்'' என்றார்.

இதே சமயம் கௌரவர்களின் படையிலுள்ளவர்கள் தருமரின் இந்த செயலைக் கண்டு பலவிதமாகப் பேசலானார்கள். ''இந்த தருமர் போர்புரியத் தெரியாமல் நம் துரியோதன மன்னரிடம் சமாதானம் செய்து கொள்ள வந்திருக்கிறார் போலிருக்கிறது. அதனால் தான் மற்ற சகோதரர்களையும் கூட்டிக் கொண்டு வந்திருக்கிறார். போர்க்களத்திற்கு வந்து இப்படியா சோர்ந்து போவது? இது அவர்களுக்கு அவமானம் இல்லையா?''

தருமர் பீஷ்மரிடம் என்ன சொல்லப் போகிறார் என்பதைக் கேட்க எல்லோரும் ஆவலாக இருந்தார்கள். தருமர் கௌரவப் படைகளினிடையே உள்ள பீஷ்மரின்



முன்நின்று வணங்கி ''போரில் யாராலும் வெல்ல முடியாத உங்களுடன் நான் போரிட நீங்கள் எனக்கு அனுமதி அளிக்க வேண்டும்'' என்று வேண்டினார். பீஷ்மரும் ''நீ இங்கு வந்த இவ்வாறு கேட்டது எனக்கு மிக்க மகிழ்ச்சியை அளிக்கிறது. நீ போர் புரி. வெற்றி உனக்கே. பணம் என்னைக் கட்டிப் போட்டு கௌரவர்களில் அடிமையாக்கிவிட்டது. அதனால் நான் கௌரவர்களின் பக்கம் நின்று போராடியே ஆக வேண்டும். எனவே இதைத் தவிர உனக்கு வேண்டியது எதுவானாலும் வரமாகக் கேள். நான் கொடுக்கிறேன்'' என்றார்.

தருமரும் ''தோல்வியே கண்டிராத உங்களை நாங்கள் போரில் எந்த வழியில் வெல்ல முடியும் என்பதைக் கூற வேண்டும்'' என்று வேண்டினார். பீஷ்மரும் ''அது பற்றி பிறகு கண்டிப்பாகக்கூறுகிறேன்'' என்றார். அடுத்து தருமர் துரோணரின் தேரருகே சென்று அவரை வலம் வந்து வணங்கி ''ஆசாரிய சிரேஷ்டரே! போர் புரிய உங்களது அனுமதியைப் பெற வந்திருக்கிறேன். உங்களது அனுக்கிரகம் இல்லாமல் போரில் நாங்கள் எப்படி வெற்றி பெற முடியும்?'' என்றார்.

துரோணரும் ''நீ வந்து அனுமதி கோரியது எனக்கு மகிழ்ச்சியையே அளிக்கிறது. கௌரவர்களின் உப்பைத்தின்றதால் உனக்குப் போரில் உதவ முடியாது. வேறு எது வேண்டுமானாலும் என்னிடம் கேட்டு நீ பெறலாம்'' என்றார்.

தருமரும் ''போரில் தங்களை வெல்ல யாராலும் முடியாது. தங்களைத் தோற்கடிக்க நாங்கள் என்ன செய்ய வேண்டும்?'' என்று கேட்டார். துரோணரும் ''நான் ஆயுதத்தைக் கையில் எடுத்துக் கொண்டு போர் புரியும்வரை யாராலும் என்னை வெல்ல முடியாது. யாராவது நான் விரும்பத்தகாத செய்தியைக் கூறினால் நான் ஆயுதத்தைக் கீழேபோட்டு விடுவேன். அந்நிலையில் என்னைக் கொல்லலாம். ஆனால் அச்செய்தியைக் கூறுபவன் நான் மிகவும் நம்பத்தக்கவனாக இருக்கவும் வேண்டும்'' என்றார்.

அதன் பின் தருமர் கிருபரிடமும் போய் அவரது அனுமதியும் ஆசிகளும் பெற்றுக் கொண்டார்.

அதன்பின் அவர் சல்லியனிடம் சென்று ''மாமா! உங்களுடன் போர் புரிய அனுமதியும் ஆசிகளும் அளியுங்கள்'' என்றார். சல்லியனும் ''நான் கௌரவர்களுக்கு வாக்கு கொடுத்துவிட்டதால் உங்களுக்கு உதவ முடியாது. இதைத் தவிர வேறு எது கேட்டாலும் செய்கிறேன்'' என்றான். தருமரும் ''மாமா! போரில் கர்ணனைக் கொல்ல நீங்கள் எங்களுக்கு உதவ வேண்டும்'' என்று கேட்டார்.

சல்லியனும் ''ஆகட்டும் செய் கிறேன். போர் புரி, வெற்றி உனக்குத்தான்'' என்று கூறி ஆசிகளை அளித்தான். அதன்பின் தருமர் தன் தம்பிகளுடன் தன் படைகள் இருக்கும் இடத்திற்குத் திரும்பிச் சென்றார்.

கிருஷ்ணரோ கர்ணன் இருக்கும் இடத்திற்குச் சென்று அவனிடம் ''கர்ணா! நீதான் பீஷ்மர் போர்க் களத்தில் இருக்கும்வரை கௌரவர் பக்கம் நின்று போரிட முடியாது என்று கூறிவிட்டாயே. பீஷ்மரது மரணத்திற்குப் பிறகு போர்புரி. அவர் போர் புரியும்வரை பாண்டவர்கள் பக்கம் நின்று போர் புரியலாமே'' என்றார். கர்ணனோ ''நான் ஒருபோதும் துரியோதன னுக்குத் துரோகம் செய்ய மாட்டேன்'' என்றான்.

தருமர் தம் படைகளிலிருந்த பக்கம் வந்து நின்றதும் கௌரவப் படையினரைப் பார்த்து ''உங்களில் யாராவது எங்கள் பக்கம் வந்து சேர விரும்பினால் தாராளமாக வரலாம்'' என்று அறிவித்தார். அப்போது திருதராஷ்டிரனின் புதல்வர்களில் ஒருவனான யுயுத்தசு தருமரைப் பார்த்து ''நான் தங்கள் மீது மிகுந்த மரியாதை கொண்டவன். என்னை நீங்கள் உங்களோடு சேர்த்துக் கொண்டால் நான் கௌரவர்களை எதிர்த்துப் போராடுவேன்'' என்றான். தருமரும் அவனை ஏற்றுக் கொண்டார்.

தருமர் கவசங்களை அணிந்து கொள்ளவே மற்ற பாண்டவர்கள் தம் தேர்களில் ஏறி அமர்ந்து கொண் டார்கள். சங்குகள் முழங்கின. முரசொலிகள் கேட்டன. போர் ஆரம்பமாகியது.





# பண்டிதரே தான்!

பூங்குடியில் பூபதி என்ற பிராம்மண இளைஞன் இருந்தான். சிறு வயதிலேயே தாய் தந்தையரை இழந்து உற்றார் உறவினர் என யாரும் இல்லாமல் ஊரார் வீட்டில் கிடைத்ததை உண்டு காலம் கழித்து வந்தான். அதற்காக அவன் புரோகிதர் போலப் பணி புரிந்தான். அதில் கிடைத்த பணத்தைச் சிறிது சிறிதாகச் சேர்த்து வரலானான்.

சிறுவயதிலிருந்தே அவனுக்கு இலக்கியம் கற்பதில் ஆர்வம் இருந்தது. ஊரிலிருந்த பண்டிதர்களிடம் கற்றுக் கவிதை புனையும் திறனும் பெற்று விட்டான். அவன் குரல் வளமும் பெற்றிருந்ததால் தான் இயற்றிய கவிதை களைப் பாடி மகிழ்ந்தும் வந்தான். ஒரு நாள் வெளியூரிலிருந்து வந்த கவிஞர் ஒருவர் அவனது கவிதைகளைக் கேட்டு விட்டு ''தம்பீ! இசை பாடுபவனின் இசையும் கவிஞனின் கவிதையும் தக்க ஆதரவு பெறாவிட்டால் அவற்றிற்கு மதிப்பே இல்லை. உன் திறமை வெளிப்பட நீ மன்னனை அணுகி அவனது தர்பாரில் பண்டிதர் பதவியைப் பெற வேண்டும். எனவே நீ தலைநகருக்குப் போய் அதற்கான முயற்சி செய்'' என்றான்.

அந்தக் கவிஞர் கூறியபடியே தலை நகருக்குப் போய் மன்னனின் தர்பாரில் உத்தியோகம் பெறுவது என்று பூபதி தீர்மானித்துக் கொண்டான். தான் சேர்த்து வைத்திருந்த பணத்தை எடுத்துக் கொண்டு அவன் தலைநகரை நோக்கிச் சென்றான். தலைநகரை அடையுமுன் ஒரு கிராமத்தை அடைந்தான். அங்கு உணவு விடுதியோ அல்லது சத்திரமோ இருக்கிறதா என்று விசாரிக்கலானான். அப்படி அவன் ஒரு பிராம்மணரிடம் விசாரித்த போது அவனைப் பற்றிய விவரங்களைக் கேட்டு அறிந்து கொண்ட அவர் ''பூபதி! நீயோ பிராம்மணன். என் வீட்டிற்கு வா. அங்கு சாப்பிட்டு இளைப்பாறி விட்டு நாளை தலை நகருக்குப் போகலாம்'' என்று கூறி

மோகன் சங்கரராம்

அவனைத் தன் வீட்டிற்கு அழைத்துச் சென்றார். அங்கு அந்தப் பிராம்மணரின் கிழத்தந்தை இருந்தார். அவரும் பூபதியிடம் கேள்விகளைக் கேட்டு அவனது குடும்பத்தைப் பற்றித் தெரிந்து கொண்டு ''பூபதி! நீ எங்களுக்கு ஒரு வகையில் உறவினனே. இந்த ஊரிலேயே இரு. நான்கு வீடுகளில் புரோகிதம் என்று போனாலே உனக்கு வேண்டியது கிடைக்கும்'' என்றார்.

அதற்கு அவன் பதில் சொல்லப் போகையில் அக்கிழவனின் பேத்தி ஈஸ்வரி அங்கு வந்தாள். அங்கு தன் தாத்தாவுடன் ஒரு இளைஞன் இருப்பது கண்டு வெட்கத் துடன் தாத்தாவைப் பார்த்து ''தாத்தா! சாப்பிட வாருங்கள். அப்பா அழைத்து வரச் சொன்னார்'' என்றாள். அப்போது அவர் ''ஈஸ்வரி! இவன் பெயர் பூபதி. இவன் பெயர் பூபதி. இவன் ஒரு கவிஞன். நன்கு படித்த பண்டிதர்'' என்றார்.

அவளும் சிரித்துக் கொண்டே ''அப்பா இவரைப் பற்றி விவரமாகச் சொன்னார். மன்னரின் தர்பாரில் இப்போது மூன்று பண்டிதர்கள் இருக்கிறார்கள். ஒருவர் பகலிலும் மற்றவர் மாலையிலும் மூண்றாமவர் இரவிலும் மகாபண்டிதர்கள். இவர் எந்தப் பொழுதில் எப்படிப்பட்ட பண்டிதராம்? '' என்று கேட்டாள். அதைக் கேட்ட பூபதி சிரித்தவாறே! ''நான் இன்னும் எல்லா வேளைகளையும் எதிர்பார்த்து இருப்பவனே. நீங்கள் கூறிய அந்த மூன்று பண்டிதர்களிட மிருந்து பாராட்டுதல்களைப் பெற்றாலே நானும் குறிப்பிட்ட வேளைப் பண்டிதர் என்று பெயர் பெற முடியும்'' என்றான்.

இந்த உரையாடலை மன்னனின் ஒற்றர்கள் கேட்டார்கள். இது ஏதோ



சதிகாரர்களின் ரகசியத் தகவல் என எண்ணி அவர்கள் தாம் கேட்டதை அப்படியே மன்னனிடம் கூறினார்கள். மன்னனும் அதற்குப் பொருள் என்ன என்று தெரிந்து கொள்ளத் தன் தர்பாரிலுள்ள மூன்று பண்டிதர்களையும் அழைத்து ஒற்றர்கள் கேட்ட உரையாடலைக்கூறி அதன் பொருள் என்ன என்று அவர்களிடம் கேட்டான்.

பண்டிதர்கள் மூவரும் அது கேட்டு ஆத்திரம் அடைந்து ''அரசே! அறிவற்ற அற்பங்கள் கூறுவதற்கு எல்லாம் என்ன பொருள் இருக்கிறது? அந்தப் பெண் ஈஸ்வரியும், பூபதியும் எங்களைத் திட்டி அவமானப்படுத்தியுள்ளார்கள். பகல் பண்டிதர் என்றால் சூதாடி என்றும் மாலை பண்டிதர் என்றால் திருடர் என்றும் இரவு வேலைப் பண்டிதர் என்றால் பிற பெண்களை நாடுபவர் என்ற பொருளில் தான் கூறி இருக்கிறார்கள்'' என்றனர்.

மன்னன் மறுநாள் பூபதியையும், ஈஸ்வரியையும் தன் தர்பாருக்கு வரவழைத்தான். அவர்களது உரையாடலின் பொருளைப் பண்டிதர்கள் தம்மைத் திட்டினார்கள் என்று குற்றம் சாட்டியதைக் கூறி ''இதற்கு என்ன பதில் சொல்லப் போகிறீர்கள்? கற்றறிந்த பண்டிதர்களை இப்படிக் கேவலப் படுத்தியதற்காக உங்கள் இருவரையும் ஏன் தண்டிக்கக் கூடாது?'' என்று கேட்டான். அது கேட்டு பூபதியும் ஈஸ்வரியும் கலந்து பேசியபின் பூபதி அப் பண்டிதர்களைப் பணிவுடன் வணங்கி ''பண்டிதமணிகளே! ஒரு வேளை நீங்களே உங்கள் குறைபாடுகளை வெளிப்படுத்திக் கொண்டீர்களோ என்னவோ! இது எனக்குத் தெரியாது. எங்கள் உரையாடலின் பொருள் நீங்கள் கூறியதே அல்ல. சூதாடி பல இன்னல்கள் பட்ட பாண்டவர்களின் மகாபாரதத்தைக் கூறுபவர் பகல் பண்டிதர். சீதையை அபகரித்துக் கொண்டுபோன இராமாயணக் கதையைக் கூறுபவர் மாலை வேளைப் பண்டிதர். கோபிகைகளுடன் லீலைகள் புரிந்த ஸ்ரீகிருஷ்ணரின் கதையான பாகவததைக் கூறுபவர் இரவுப் பண்டிதர். இவ்வாறு மகாபாரதத்தையும், இராமாயணத்தையும் பாகவதத்தையும், மக்களுக்கு விளக்கிக் கூறுபவர்கள் இந்த முப்பெரும் பண்டிதர்கள் என்ற பொருளில் தான் நாங்கள் பேசிக் கொண்டோம். இத்தகைய பண்டிதர்கள் என்னைப் பாராட்டினாலே நான் புகழ் பெற முடியும் என்று நானும் கூறினேன்'' என்றான்.

பூபதி கூறிய விளக்கம் கேட்டு அந்த மூன்று பண்டிதர்களும் மகிழ்ந்து போய் ''நாங்கள் மனதில் ஏற்பட்ட பொறாமை காரணமாக உங்களது உரையாடலுக்கு விபரீதமான பொருளைக் கூறினோம். நீங்களோ எங்களை எந்தெந்த இலக்கியங்களில் புலமை பெற்றவர்கள் என்பதை எடுத்துக் கூறி இருக்கிறீர்கள். உண்மையிலே நீங்கள் தாம் மாபெரும் பண்டிதர். உங்களை மனதார வாழ்த்துகிறோம்'' என்று கூறினார்கள். மன்னனும் பூபதிக்கு ஏராளமான பரிசுகள் கொடுத்துத் தன் தர்பாரின் பண்டிதராக்வும் நியமித்து விட்டான்.

இதற்கு ஒரு மாதத்திற்குப் பின் பூபதிக்கும் ஈஸ்வரிக்கும் திருமணம் இனிதே நடைபெற்றது. பூபதி காலை, நண் பகல், மாலை, இரவு என நான்கு வேளைப் பண்டிதர் என்ற புகழைப் பெற்றான்.





# சிக்கனம் எப்படி?

தென் மாவட்டத்தில் வறண்ட பகுதியிலுள்ள ஒரு கிராமத்தில் சுப்பைய்யா என்றும் சின்னைய்யா என்றும் இரு நண்பர்கள் இருந்தார்கள். அவர்களுக்கு அப்பகுதியில் எவ்வித வேலையும் கிடைக்கவில்லை. அதனால் தம் ஊரைவிட்டுப் போய் பட்டணத்தில் ஏதாவது வேலை செய்து பிழைப்பது என்று தீர்மானித்துக் கொண்டார்கள்.

அப்போது சுப்பைய்யா ''நமக்கு சாப்பிட தினமும் கால்படி அரிசியும் இரண்டு வெங்காயமும் இருந்தால் போதும். நாம் சம்பாதிப்பதை இவற்றிற்கு மட்டும் செலவு செய்து மீதப் பணத்தைச் சேகரித்து சிக்கனமாக வாழ்ந்து வருவோம் என்று உறுதி மொழி எடுத்துக் கொள்வோம். அதனால் நம்மிடம் சேரும் பணத்தால் ஏதாவது ஒரு தொழிலையோ அல்லது வியாபாரத்தையோ தொடங்குவோம்'' என்றான். சின்னைய்யாவும் அதற்குச் சம்மதிக்க, இருவரும் அந்த உறுதிமொழியை எடுத்துக் கொண்டனர்.

இருவரும் தம் ஊரை விட்டுப் புறப்பட்டு தொழில் நகரமான பட்டணத்தை அடைந்தார்கள். அப்போது சுப்பைய்யா ''இனி நாம் ஒருவர் மற்றவருக்கு பாரமாக இராமல் பிரிந்து செல்வோம். வேலை தேடிப் பிழைத்துக் கொள்வோம். ஆனால் நாம் செய்த உறுதி மொழியின்படியே நடப்போம். என்பதை மட்டும் மறக்காமல் நினைவில் கொள்வோம்'' என்றான். சின்னைய்யாவும் தலையாட்டி விட்டு சுப்பைய்யாவிடம் விடை பெற்றுக் கொண்டு சென்றான்.

சுப்பைய்யா கிடைத்த வேலைகளைச் செய்தான். உறுதிமொழிக்கு ஏற்றபடி உணவு உண்டு சிக்கனமாக வாழ்ந்து பணம் சேர்த்தான். ஆனால் சின்னைய்யா ஆரம்பத்தில் சில நாட்களுக்கு உறுதி மொழிப்படி நடந்தான். ஆனால் சம்பாதிப்பது நன்கு சாப்பிடவே என எண்ணி பலவித காய் கறிகளை வாங்கி சமைத்தும் இனிப்புகளைச் செய்தும் சாப்பிட்டான். அதனால் சுகப்பட்டாலும் அவனது மனம் மட்டும் உறுதிமொழியிலிருந்து நழுவியதைச் சுட்டிக்காட்டி உறுத்தியது. எனவே மீண்டும் உறுதிமொழிப்படி நடக்க முயன்றான். ஆனால் ருசியின் சுகம் மீண்டும் அவனை சிக்கனமாக இருக்க விடவில்லை.

இதனால் சின்னைய்யாவால் பணம் சேர்த்து வைத்துக் கொள்ள முடியவில்

சு.சோபினி



லை. செலவு அதிகமாகி கடன் என்றெல் லாம் வாங்கிக் கஷ்டப்படலானான். உடல் வேலை செய்ய மறுத்து சுகமாக இருக்க விரும்பியது. அதனால் வேலை எதுவும் செய்யாமல் சரியாகச் சாப்பிடக் கூட முடியாமல் திண்டாடலானான்.

சுப்பையாவோ சிக்கனமாக வாழ்ந்து பணம் சேர்த்து சிறுசிறு வியாபாரம் களைச் செய்யத் தொடங்கி முடிவில் பட்டணத்தில் மிகப் பெரிய வியாபாரி களில் ஒருவனாக ஆகிவிட்டான். தன்னோடு வெறுங்கையோடு வந்த சுப்பைய்யா செல்வந்தனாகி நன்கு வாழ்வது கண்டு தன் நண்பனிடம் உதவி பெறஎண்ணி சின்னய்யா அவனது வீட்டிற்குச் சென்றான்.

அவன் சுப்பைய்யாவிடம் அதிர்ஷ்டம் தன்னைக் காலை வாரி விட்டது எனக் கூறித் தன் நிலையை விளக்கி னான். அது கேட்டு சுப்பைய்யா ''உனக்கு தினமும் உணவிற்காக அரிசியும் சில வெங்காயங்களும் கிடைக்க ஏற்பாடு-செய்கிறேன். நீ உன் சொந்த பலத்தால் நிலைத்து நிற்க முயற்சி செய். அதுவரை நீ என் வீட்டின் பின் புறத்தில் குடிசை போட்டுக் கொண்டு இருக்க இடமும் கொடுக்கிறேன்'' என்று கூறி இடம் கொடுத்தான். தினமும் கால்படி அரிசி யும் இரண்டு வெங்காயமும் சின்னைய் யாவுக்கு அவன் அனுப்பி வந்தான். சின்னைய்யாவும் சாதம் வடித்து வெங்காயத்தைக் கடித்து கொண்டு உணவு உண்டு வரலானான்.

சில நாட்களானதும் சுப்பைய்யா சின்னைய்யாவை அழைத்து ''தினமும் பச்சை வெங்காயத்தைக் கடித்துக் கொண்டு சாதம் சாப்பிட்டு நீ அலுத்துப்

போயிருப்பாய். அதனால் நீ ஒரு வேலை செய். என் புளியந் தோப்பிலுள்ள சிறு புளியஞ் செடிகளை உனக்குக் கொடுக்கிறேன். நீ அவற்றின் துளிர் இலைகளைப் பறித்து வெங்காயத்துடன் சேர்த்து துகையல் அறைத்து சாதத்தோடு பிசைந்து சாப்பிடு. ருசியாக இருக்கும்'' என்றான்.

சின்னைய்யாவும் அவ்வாறே செய்ய தோப்பிலிருந்த சிறிய புளியச் செடிகளிலிருந்த துளிர் இலைகளெல்லாம் தீர்ந்து போயின. அப்போது அவன் போய் சுப்பைய்யாவைக் கண்டு ''நீ சொன்ன படியே சிறு புளியஞ் செடிகளிலிருந்து இளந்துளிர்களைப் பறித்து துகையல் அறைத்துச் சாப்பிட்டேன். இப்போது பறிக்க ஒரு இலைக் கூட அச் செடிகளில் இல்லை'' என்று தயங்கி தயங்கிக் கூறினான்.

அதைக் கேட்ட சுப்பைய்யா ''பரவாயில்லை. அதனால் என்ன? பெரிய புளியமரங்கள் உள்ளன. அவற்றில் துளிர் இலைகள் இருக்கும். பறித்துக் கொள்'' என்றான். சின்னைய்யாவும் தன் நண்பன் கூறியபடியே பெரிய மரங்களிலிருந்து துளிர் இலைகளைப் பறித்து துகையல் அறைத்துச் சாப்பிட்டு வந்தான்.

ஒரு நாள் சுப்பைய்யா சின்னய்யாவை அழைத்து ''இப்போது புளிய மரத்தில் துளிர் இலைகள் தீர்ந்து விடவில்லையே?'' என்று கேட்டான். சின்னைய்யாவும் ''இல்லை நான் ஒரு கொத்தைப் பறித்தால் நான்கு புதிய கொத்துக்கள் முளைத்து விடுகின்றன. அதனால் துளிர் இலைகள் கிடைத்துக் கொண்டே இருக்கின்றன'' என்றான். அப்போது சுப்பைய்யா ''உன் செயலுக்கும் என் செயலுக்கும் இதுதான் வித்தியாசம். புளியஞ்செடி முற்றி மரமாகுமுன் அதன் துளிர்களைப் பறித்து விட்டால் இலைகளே இல்லாது போய் மீண்டும் துளிர்க்காது. அந்தச் செடி மரமாகும் வரை காத்திருந்து துளிர்களைப் பறித்தால் மரத்தில் மீண்டும் துளிர்கள் தோன்றி வளர்ந்து கொண்டே இருக்கும். அது போலத்தான் நாம் சம்பாதிக்கும் பணமும். ஆரம்ப வருமானத்தை முழுவதும் செலவு செய்து விட்டால் பணம் பெருகாது. காத்திருந்து பணம் சேர்த்தால் அது பெருகும். அதிலிருந்து நமக்குச் செலவுக்கு வேண்டியதை எடுத்துக் கொள்ளலாம்'' என்றான்.

சின்னைய்யாவும் ''சிக்கனத்தால் எவ்வாறு உயர்வு அடையலாம் என்பது இப்போது தான் புரிந்தது. இனி நான் நீ கூறிய அறிவுரைப்படியே நடக்கிறேன்'' எனக் கூறினான்.



# மன்னனுக்கும் பணிவு வேண்டும்!


















அரண்மனையை அடைவதற்கு முன்பே மன்னனுக்கு கர்வம் தலைக்கு ஏறியது.




மன்னன் தினமும் விருந்திற்கு ஏற்பாடு செய்து விட்டுத் தன் சமையல் காரனை அழைத்தான்.




விருந்திற்கு பிரமுகர்களும் அரசாங்க அதிகாரிகளும் வந்தனர். பாகற்காய் கறியையும் வேப்பிலைத்துகைய'லையும் ருசி பார்த்து விட்டு முகம் சுளித்தனர்.




மன்னன் தன் மனவேதனையை அடக்கிக் கொண்டான். சமையல்காரனை அழைத்து சொன்னான்.




விருந்தினர்கள் சென்ற பின் மன்னன் காட்டிற்குப் போய் முனிவரைக் கண்டு தன் விருந்து பற்றிக் கூறினான்.




மன்னன் வெட்கப்பட்டான். மன்னன் எப்போதும் பணிவுடன் இருக்க வேண்டும் என்று தெரிந்து கொண்டு தலை நகருக்குச் சென்றான்.





# அம்புலிமாமா

## பாரத தரிசனம் வாசகர்களுக்குப் போட்டி

இந்த இதழிலுள்ள கேள்விகளுக்கு அடுத்து வரும் இதழில் விடைகள் பிரசுரிக்கப் படும். அதற்குள் உங்களால் சரியான விடைகள் காணமுடியுமா என்று பாருங்கள்.



1. அ) பழங்கால இந்திய இலக்கியத்தில் முதன் முதலாக எழுதப்பட்ட நாவல் என எது குறிப்பிடப் படுகிறது?
   ஆ) பழங்கால இந்திய இலக்கியத்தில் இரு ரிஷிகள் சேர்ந்து இயற்றிய நூல் எது என்று கருதப்படுகிறது?
   இ) முதன் முதலாவது வரலாற்று நாடகம் எனப் புகழ் பெற்றது எது?
   ஈ) காளிதாசருக்குப் பிறகு குறிப்பிடத்தக்க நாடக ஆசிரியர் யார்? அவர் இயற்றி பெயர் பெற்ற படைப்பு எது?

2

அசுவமேத யாகத்தைச் செய்ய ஆரம்பித்த ஒரு மன்னனின் தம்பியான இளவரசன் அக்குதிரையின் பின்னால் பல நாடுகளுக்குச் சென்றான். எந்த நாட்டரசனும் அக்குதிரையைப் பிடித்துக் கட்டாவிட்டால் அந்த யாகம் செய்த மன்னனே சக்ரவர்த்தி.

ஆனால் யாகக் குதிரைக்குப் பின்னால் வந்த இளவரசனையும் அவனது படைகளையும் ஒரு இளைஞன் எதிர்த்துப் போரிடவே இளவரசன் இறந்து போனான். அது தெரிந்து ஒரு பெண் மணி ஓடி வந்து இளவரசனை உயிர்ப்பித்தாள். அந்த இளைஞன் இளவரசனின் மகன் என அப்போது தெரிந்தது.

அந்த இளவரசன் யார்? அந்த இளைஞனின் பெயர் என்ன? அந்தப் பெண்மணி யார்?



# ஆக்கபூர்வமான போட்டி

பிரசுரிக்கத் தக்கதெனத் தேர்தெடுக்கப்பட்ட
ஏப்ரல் மாதப்பழமொழிக்கதை.
( ஐந்தில் வளையாததது ஐம்பதில் வளையுமா? )

# கெட்ட பழக்கம்

புதூரின்வேலனுக்கும் செல்விக்கும் பிறந்த குழந்தைகள் இருவர். ஒன்று ஆண், மற்றது பெண். இருவருக்கும் சாப்பிடும் தட்டில் சாதத்தை எறிந்து விடும் கெட்டபழக்கம் இருந்தது. வேலன் அவர்களிடம் ''உங்களுக்கு வேண்டியதை மட்டும் போட்டு கொண்டு சாப்பிடுங்கள்'' என்பான். செல்வியோ ''அவர்கள் எறிந்தால் என்ன? நமக்கு பணமாஇல்லை? பிச்சையா எடுக்கிறோம்?'' எனக் கூறி வருவாள், இதுவேலனுக்கு பிடிக்கவில்லை.

ஒருநாள் அவன் செல்வியிடம் ''நாளை காலை மலைக்கோவிலுக்கு எல்லோரும் போகப்போகிறோம். கட்டு சாதம் தயாரித்துவை'' என்றான் செல்வியும் மறுநாள் விடிவதற்குள் தயாரித்துவிடவே, வேலன் கட்டுசாத மூட்டையைத்தன் பைக்குள் எடுத்து வைத்துக் கொண்டான். எல்லோரும் மலைக்கோவிலுக்கும் போனார்கள். சுவாமிதரிசனம் செய்துவிட்டு உச்சிவேளையின்போது குழந்தைகளும் செல்வியும் சாப்பிடஉட்கார்ந்தார்கள் வேலன் பைக்குள் கைவிட்டு ''அடடா'' சாத மூட்டையைத் தேங்காய் பழக்கடையில் பூஜைக்கு சாமன்கள்வாங்கும் போது எடுத்துவைத்தேன் அங்கேயேவிட்டு வந்துவிட்டேன்'' என்றான்

வேறுவழியின்றி சாப்பிடாமல் எல்லோரும் வீட்டிற்குத்திரும்பிவந்தார்கள். வீட்டில் செல்வி சமையல் செய்ய அடுப்பு மூட்டப்போகவே வேலன் வேண்டாமெனக் கூறித்தன்பையிலிருந்து கட்டு சாத மூட்டையை எடுத்தான். அது கண்டுசெல்வி அவனை திட்டவே அவன்லட்சியம் செய்யாமல் தட்டுகளில் அந்த சாதத்தை எடுத்துவைத்து குழந்தைகளிடம் கொடுத்துவிட்டுதன் மனைவியிடம் ''இன்னும் கொஞ்சம் நேரத்தில் குழந்தைகளின் தட்டுகளைப்பார்'' என்றான் தட்டுகள் சுத்தமாகக்காலியாகி இருந்தன.

''பணத்தின் அருமை அதை வைத்திருப்பவனை விட அது இல்லாதவனுக்குத் தான் தெரியும். சாதத்தின் அருமை மூன்று வேளை வயிறு முட்டச் சாப்பிடு பவனுக்குத் தெரியாது. வயிறுகாய்பவனுக்குத்தான் தெரியும் இப்போது இவர்களுக்குச் சொல்லவும். உன்அறிவில்பதியவும் இப்படி ஒரு நாடகம் ஆடினேன். இப்போதே தெரியா விட்டால் வயதாகிவிட்டால் தெரியாது ஐந்தில் வளையாததது ஐம்பதிலா வளையும்?''என்றான்.

செல்வியும் குழந்தைகளும் உண்மையைப் புரிந்து கொண்டு அன்றிலிருந்து அவர்கள் சாதத்தை எறியாமல் சாப்பிட்டு வந்தனர்.

ஆர். ஸ்ரீனிவாசன்





# பாரதநாடு

## அன்றும் இன்றும்

### ஸ்ரீநகர்
### சிங்கார நகரம்

ஜம்மூ காஷ்மீர் மாநிலத்தின் தலைநகர் ஸ்ரீநகர் இந்த அழகிய நகரம் கடல் மட்டத்திற்கு மேல் 1768 மீ. உயரத்தில் உள்ளது. தால் ஏரி, மற்றும் பல பூங்காக்கள் இங்கு நம் கண்களைக் கவர்பவை. இங்கு ஜீலம் நதி பாய்கிறது. ஒரு காலத்தில் இந்த நிலப்பகுதி முழுவதும் நீரில், மூழ்கி இருந்ததாம். அதில் ஜலோத்பவன் என்ற ராட்சஸன் வாழ்ந்தான். நீரில் உள்ளவரைதான் அவனுக்கு பலம். அவன் அட்டூழியங்களைச் செய்து விட்டு நீருக்குள் போய் விடுவதால் அவனை யாராலும் எதுவும் செய்ய முடியவில்லை.

அவனது ரகசியத்தை அறிந்த கஸ்யப முனிவர் அப்பகுதி நீரை எல்லாம் வற்றடிக்கவே அந்த ராட்சஸன் துடிதுடித்து இறந்து போனான். அதனால் கஸ்யபர் பெயர் வைக்கப்பட்டு நாளடைவில் காஷ்மீர் என அது திரிந்தது. கல்ஹணர் எழுதிய 'ராஜதரங்கிணி' என்ற வரலாற்றில் ஸ்ரீநகரை அசோகச் சக்ரவர்த்தி நிர்மாணித்தார் எனக் கூறப்பட்டுள்ளது. உண்மையில் அந்த பெருமை அசோகரின் மகள் சாருமதிக்குத் தான் சேரவேண்டும். அவள் தன் தந்தையுடன் தால் ஏரிக் கரையில் உலாவிக் கொண்டிருக்கையில்

''இந்த இடத்தில் எவ்வளவு அமைதி நிலவி உள்ளது! எனவே இங்கு ஒரு பௌத்த விஹாரத்தைக் கட்டுங்கள்'' என்றாள். அசோகரும் அவ்வாறே செய்ய அந்த விஹாரத்தைச் சுற்றி ஏற்பட்ட நகர் தான் ஸ்ரீநகர்.

இதற்கு அப்பெயரை யார் வைத்தார்கள் என்று தெரியவில்லை. சூரிய நகர் என்ற பெயர் ஸ்ரீநகர் என்றாகி இருக்கலாமென சிலர் கருதுகிறார்கள்.

இந்தியா 1947ல் இரு நாடுகளாகப் பிரிக்கப்பட்டபோது சமஸ்தான மன்னர்கள் இந்தியாவுடனோ அல்லது பாகிஸ்தானுடனோ சேர்ந்து கொள்ளலாமென்ற உரிமை கொடுக்கப்பட்டது. காஷ்மீர மன்னர் ஒரு முடிவிற்கு வருமுன் பாகிஸ்தான் தன் கூலிப் படைகளை காஷ்மீருக்குள் அனுப்பியது. மன்னர் ஹரிசிங் உடனே இந்தியாவுடன் சேரவே இந்தியப் படைகள் பாகிஸ்தான் கூலிப்படைகளை விரட்டின. நேரு விஷயத்தை ஐக்கிய நாடுகள் சபைக்கு எடுத்துச் செல்ல அது தலையிட்டு சமாதானப்படுத்தி லடாக் பகுதியில் போர் நிறுத்த எல்லைக் கோட்டை வரைந்து கொடுத்தது. அதனால் காஷ்மீரின் ஒரு பகுதி இன்றும் பாகிஸ்தானின் ஆக்கிரமிப்பில் உள்ளது.

இதனால் காஷ்மீருக்கு வரும் சுற்றுலாப் பயணிகளின் எண்ணிக்கை குறைந்தது. இப்போது நிலைமை சீரடைந்து விட்டது. அதனால் பெரும் எண்ணிக்கையில் பயணிகள் வருகிறார்கள். நிஷால்பாக் என்ற பூங்கா, ஜஹாங்கீர் அமைத்த ஷாலிமார் பூங்கா, ஆதி சங்கரர் தியானம் செய்த ஹரிபர்வதம், நபிகள் நாயகத்தின் தலைமுடி வைக்கப்பட்டுள்ள ஹஜ்ரத்பால் மசூதி முதலியன பழைய ஸ்ரீநகரிலுள்ள பெயர் பெற்ற இடங்கள். புதிய ஸ்ரீநகரில் ஹோட்டல்களும், படகு வீடுகளும் சுற்றுலாப் பயணிகளுக்கு எல்லாவசதிகளோடும் கிடைக்கின்றன.

இங்கு அமைதியான சூழ்நிலையில் கல்வி மையங்கள் உள்ளன. ஜம்மூ காஷ்மீர் பல்கலைக்கழகம், ஷேர்.ஏ.காஷ்மீர் விவசாயப் பல்கலைக்கழகம் அவற்றில் பெயர் பெற்றவை.



மிதக்கும் பூங்கா - பழைய படம்
எதிர்பக்கத்தில் தால் ஏரியில் படகு வீடுகள்

காஷ்மீர் கைவினைப் பொருள்களுக்கு பெயர் பெற்றது. சால்வைகள், விரிப்புகள், உலோகப் பொருள்கள் சித்திர வேலைப் பாடுடன் கூடியவை. காஷ்மீர் கஸ்தூரி மணமிக்கது.

# இன்றைய உலகம்

# இலங்கையில்

ஸ்ரீலங்கா என்றழைக்கப்படும் சிங்களநாட்டை வெகுகாலத்திற்கு முன் கிழக்கிந்தியாவிலிருந்து விஜயசிங்கன் என்ற இளவரசன் வந்தடைந்தான் என்று மகாவம்சம் என்ற வரலாற்று நூல் கூறுகிறது. அவன் தனது ஆட்சியைப் படைத்தலைவர்கள் உதவியுடன் நடத்தினான். அத்தலைவர்கள் தென்னிந்தியப் பெண்களை மணக்க ஏற்பாடு செய்தான். விஜய சிம்மனின் பெயரில் சிம்ஹளம் என்று இந்நாடு



அழைக்கப்பட்டது. அசோகச் சக்கரவர்த்தியின் மகன் மகேந்திரனும் மகள் சங்க மித்திரையும் சிங்கள அரச குடும்பத்தினரை புத்தமதத்தைத் தழுவச் செய்தனர்.

அதன்பின் அரசகுமாரர்களும் வியாபாரிகளும் குறிப்பாகத் தமிழக நாடுகளிலிருந்து சென்று இத்தீவில் குடியேறினார்கள். இவர்களில் பெரும்பாலானோர் இந்தியாவிற்கு மிக அருகிலுள்ள யாழ்ப்பாணப் பகுதியில் குடிபுகுந்தனர். சிங்களவரும் தமிழர்களும் இந்திய இனத்தவராயினும் பெரும் பான்மையினரான சிங்களவர் சிறு பான்மையினரான தங்களுக்கு அநீதி இழைப்பதாகத் தமிழர்கள் எண்ணத் தொடங்கினர். தமிழர் ஐக்கிய விடுதலை முன்னணியின் கீழ் அவர்கள் கிளர்ச்சிகளை நடத்தினார்கள். நாளாவட்டத்தில் பல தமிழர் அமைப்புகள் ஏற்பட்டு விட்டன. இவற்றில் ஒன்று தான் தமிழ் ஈழ விடுதலைப் புலிகள்



# கொந்தளிப்பு



அமைப்பு. இது வன்முறையில் நம்பிக்கை கொண்டது. ஸ்ரீலங்காவிலிருந்து ஈழம் பிரிக்கப்பட வேண்டுமெனக் கோருகிறது.

இந்த விடுதலைப் புலிகளின் அமைப்பு தானே இலங்கைத் தமிழ்ர்களின் எண்ணங்களைப் பிரதிபலிக்கும் ஒரே அமைப்பு என்கிறது. தன் கொள்கைகளை எதிர்ப்பவர்களை இது ஒழித்து விடுகிறது. இதனுடன் நில்லாமல் இது இந்தியப் பிரதம மந்திரி ராஜீவ் காந்தியையே கொன்று விட்டது. தற்போது ஸ்ரீலங்காவின் ராணுவத்திற்கும் விடுதலைப்புலிகளுக்குமிடையே கடும் போர் நிகழ்ந்து கொண்டிருக்கிறது. யாழ்ப்பாணமக்கள் அவதிப்பட்டு அகதிகளாக இந்தியாவிற்கு வந்து கொண்டிருக்கிறார்கள். இப்போரால் ஸ்ரீலங்காவின் பொருளாதாரம் பெரிதும் பாதிக்கப் பட்டு விட்டது.

இலங்கைத் தமிழர்களுக்கு இந்தியா எப்போதும் தன் அனுதாபத்தைக் காட்டி வந்துள்ளது. ஆனால் ஸ்ரீலங்கா பிளவு படுவதை அது விரும்பவில்லை. தன் அனுபவத்தில் அது ஒரு நாடு இரண்டாகப் பிரிக்கப்பட்டால் எவ்விதப்பயனும் இல்லை என்று கண்டு கொண்டுள்ளது. மேலும் ஜனநாயகத்தில் நம்பிக்கையுள்ள எந்த நாடும் விடுதலைப்புலிகளின் வன்முறைகளை ஒப்புக் கொள்ள முடியாது. வன்முறையும், தம்மை எதிர்க்கும் தமிழர் தலைவர்களையும் கொல்வதும் பண்பட்ட செயலல்ல.

சமாதானப் பேச்சு வார்த்தைகளால் தான் இப்பிரச்சினைக்குத் தீர்வு காண முடியும் என்று இந்தியாவும் உலகின் மற்ற நாடுகளும் விரும்புகின்றன.

# போட்டோ வாக்கியப் போட்டி

தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும்.



போட்டோ
வாக்கியப்
போட்டி
அம்புலிமாமா
வடபழனி
சென்னை-600 026.





போட்டிக்கான தலைப்புகளை தபால் கார்டில் எழுதி ஜூலை 25-ம் தேதிக்குள் மேலே உள்ள முகவரிக்கு வந்து சேருமாறு அனுப்ப வேண்டும். போட்டியில் வெற்றி பெற்ற தலைப்புகள் 2000 ஜூலை மாத இதழில் வெளியிடப்படும். சிறந்த தலைப்புகளுக்கு ரூ.100/- பரிசு

## வாழ்த்துக்கள்

மே 2000 போட்டியில்
பரிசு பெற்றவர் :
**எம். சுப்பய்யா**
ஏ/22, எச்.டபிள்யூ.பி. காலனி
எச்.டபிள்யூ.பி. காலனி, P.O.
தூத்துக்குடி - 628 007.

**பரிசு பெற்ற தலைப்புகள்**

முதலாவது போட்டோ : பலியாகப்போகும் வெள்ளாட்டின் சோகம்
இரண்டாவது போட்டோ : புலியாகப்போகும் குழந்தையின் வேகம்

